வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும் - வேங்கடமே
தானவரை வீழத் தன்னாழிப்படைதொட்டு
வானவரைக் காப்பான் மலை.

--நான்முகன் திருவந்தாதி- 48

[நித்ய சூரிகளால் உண்மையான - தீவிரமான பக்தியுடன் வணஙகபபடும் மலை; பாவஙகளையும உடல் நோய்களையும நீக்க வல்ல மலை; அசுரர்களை அழித்திடும் வகையில் கையில் சக்ரப் படை ஏநதி தேவரகளைக் காத்திடும் பெருமாள் உறையும் மலை அத்திருவேங்கடம் எனும் புனிதமலையாகும். (ஆகவே அதனைத் தரிசியுங்கள.)]



# ஸப்தகிரி

## செப்டம்பர் - 1995


தனிப்பிரதி ரூ. 2 மலர் 26
வருடச்சந்தா ரூ. 24 இதழ் 4



சிறப்பாசிரியர் :
திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:
திரு என் எஸ் ராமமூர்த்தி, எம் ஏ.,

அசசிடுபவர:
திரு பி. மோகன்ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம,
திருபபதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T D., Tirupati.


## உள்ளுறை

பககம



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஆனநத நிலையோன

முதல உள்ளட்டை : ஸ்ரீசரஸவதி - சிததிரம்: ஸ்ரீதத்து.

2-வது உள்ளடடை : ஸ்ரீமகாலக்ஷமி - சித்திரம: ஆர.பி. பாபுநாத்

பின்னட்டை : ஸ்ரீசாமுணடேஸவரி - மைசூர.
புகைபபடம: சி. சிவசங்கர.

JAGADISH

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான
திருமலை திருப்பதி பெரிய கோவில் கேள்வி அப்பன்
திருவேங்கடராமாநுஜ ஜீயர் ஸ்வாமியின்

## மங்களாசாஸனம்



"வேங்கடேச ஸமோ தேவ ந பூதோ ந பவிஷ்யதி" என்பது புராண வசனம். அதாவது திருவேங்கடமு டையானோடொக்கும் பெரு மாள இதுவரையில் அவதரிக் கவிலலை. இனி அவதரிக்கப் போவதுமிலலை என்பதாகும. கறபகம, காமதேனு, சிநதா மணி முதலானவை கேட் டதையெல்லாம கொடுக்கும இயல்புடையவன.

திருவேங்கடவனோ அடியாரகள விரும்பிக்கேட் கும மறற பொருளகளையெலலாம கொடுபபது போலவே தனனையும கொடுபபான. இதுபற் றியே ஸ்ரீவேங்கடேசஸுபரபாதமருளிய பரதிவா திபயங்கரம அணணாவும,

விநா வேங்கடேசம நநாதோ நநாத:
ஸதா வேங்கடேசம் ஸமராமி ஸ்மராமி ।
ஹரே வேஙகடேச ப்ரஸீத ப்ரஸீத
ப்ரியம் வேங்கடேச பரயசச பரயசச ।।

எனறு வேண்டுகிறார். அதாவது "திருவேங் கடவனைத தவிர நாதன் இல்லவேயில்லை. எப்போதும் வேங்கடவனை நினைத்த வண்ண மாகவே இருககிறேன். பாபங்களைப் போக்கும் வேங்கடேசா! எனக்குத தவறாமல் அருள் செய்ய வேணுமா. செலவத்தைத் தரும் பெருமாளே! நான விருமபிய உன்னுடைய சேவையைத் தந்தருள்" எனறபடி.

இவ்வாறு திலதமுலகுக்காய் நின்ற திரு வேஙகடவனின் புகழைப பாரப்பும் வகையில திருமலை திருபபதி தேவஸ்தான அதிகாரிகள் கடநத 25 வருடகாலமாக 'ஸப்தகிரி' என்னும் சமய மாத இதழைச செவ்வனே நடத்தி வருகி றாரகள்.

பலவித்வான்களின கட்டுரைகளைத் தாங்கி வரும இத்திருவோணத் திருவிழா 'ஸப்தகிரி' இதழ படிபபோர் உள்ளத்தில் பக்தி உணர் வைப பெருககி, திருமலையில வந்து படியாய்க் கிடந்து வேஙகடவனின பவளவாயைக காண வழிவகுககும எனபதில் ஐயமிலலை.

ஸர்வ மஙகளாநி பவந்து.

(ஓம்) ஸ்ரீவேங்கடேச
ஸ்ரீ பெரிய ஜீயங்கார் சுவாமி
ஸ்ரீஸ்ரீ பெரிய ஜீயங்கார் மடம்
திருப்பதி.

---

## மங்களாசாஸனம்

"மாயாவீ பரமாநந்தம த்யகதவா வைகுண்ட்ட முத்தமம் ।
ஸ்வாமி புஷகரிணீ தீரே ரமயா ஸஹமோததே ।।"



எனபது புராண சலோகம். (ஆசசரயமான சகதி படைதத ஸ்ரீமநநாராயணன பேரின பமூட்டுமதான உயர்நத பர மபதததை விட்டுவிட்டு நாம உயவதறகாகத திருமலையில ஸவாமி புஷகரிணிககரையில பிராட்டியோடு கூடிககளிககி றான எனறபடி.)

இததகைய எமபெருமானே விஷ்ணு எனறு ஸதாபிதது இனியாருக்கும எவவிதமான ஸந தேகமும ஏறபடாதபடி பொனமயமான சஙகு சககரங்களை அபபெருமானுடைய திருக்கை யில் சாத்துவிததவர ஸவாமி எமபெருமானார எனபது பரஸிததம அநத எமபெருமானா ரான இராமாநுஜருடைய திவ்ய ஆக்ஞையே இனறளவும் திருமலையில நடநது வருகிறது.

இத்தகைய பெருமைபெறற திருவேங்கடவனின் ஸவரூபரூப குணஙகளைப் பல வித்வான்களின் கட்டுரைகள மூலம திருமலை திருப்பதி தேவஸ் தான 'ஸபதகிரி' மாத இதழ் பரப்பிவருவது ஸுபரஸிததம.

இபபுரட்டாசி பிரமமோறசவததை முனனிட்டு 26வது வருட தொடககததில ஸப்தகிரி சிறப பிதழாகப பறபல வித்வான்களின் கட்டுரைகள் மூலம திருவேஙகடவனின பெருமைகளை உல குககு உணர்ததுவது சாலச சிறந்ததாகும். இச்ச மய இதழ மேலும சிறபபுற பூவார் கழல்களை வேணடுகிறேன.

ஸரவ மங்களாநி பவநது.

(ஓம) ஸ்ரீரங்கராமானுஜ சின்ன ஜீயங்கார்
ஸ்ரீஸ்ரீ சினன ஜீயங்கார மடம்
திருப்பதி.



## உங்களுடன்....

வாழ வைத்திடும் நிதியாய், வழி காட்டிடும ஒளியாய, லீலைகளுககு இருப்பிடமாய் விளஙகி அரசசை வடிவில அனைவரக்கும அருள் தநது காததிடும கலியுகத தெய்வமாக அவ்வேஙகடவன் திகழகின்றான. முற்றும உணரநத ஞானிகளுக்கு மட்டுமே காட்சிககு எளியனாய் விளஙகிடும அம்மாமாயன, பயன் எதிரபாராது குழநதையிடம கருணை - அன்பைப பொழிநதிடும ஒரு தாயின் நிலையில் நின்று, மானிடரபால வைதத அன்பால் தானே வநது உதவிடும் தயாளனாக வேஙகடவன திகழ்கினறான். இவ் அனுபவததினை அவன் சன்னிதி வநதார் மட்டுமே அறிநது இனபுறறு எண்ணி எணணி மாய்ந்திட முடியும். தீயோரை அழிதது நல்லோரைக் காத்திடவே அமமாதவன் யுகந தோறும அவதாரம மேறகொண்டும, அர்ச்சை வடிவில விளங்கியும தன் பக்தர்களை நாளும் காதது வருகினறான. அவ்வகையில இககலியுகத்தில தன் லீலா விநோதஙகளால, தீயோரை அழிககாமல அவர்களைத திருத்தி, நலலோர்ககு வாழ வழி காண்பிததுத் தன் அரசாவதாரத்திற்கு ஒரு புதுபபொலிவினை - ஒரு புது நோக்கததை தநதுள்ளான வினை தீர்க்கும் அவ்வேங்கடவன். ஏழைப்பங்காளனான அவ் ஏழுமலையானுக்குத் திருமலையில் நாளும் திருக்கல்யாண கோலமதான. ஆம, ஒவவொரு நாளும, வாரமும, திங்களும, ஆண்டும நடைபெறும உத்ஸவங்களின் மூலம அவனதன் பெருமையும், சிறப்பும், ஆற றலும புராணகாலந தொட்டு உலகெங்கும ஓஙகி வளர்ந்து வருகிறது. அததகு மேன்மைமிகு உதஸவங்களில் ஒன்று தேவரகளால துவக்கபபெறறு, அரசர்களால் கொண டாடப்பெறறு, ஆண்டாணடுகாலமாகத திருமலையில இனறுவரை கொண்டாடப்பெறும 'பிரமமோதஸவம்' எனும் பெருவிழாவாகும.

பிரமமதேவனால் துவக்கபபெறறு, மற்றைய தேவதைகளால் போறறப்படும இபபிரம்மோதஸவ விழாவில் அததேவர்களே பங்கு பெறுவதாக நம்பப்படுகிறது. இபபதது நாள் உத்ஸவத்தினபோது திருமலை 'பூலோக வைகுநத'மாகப் புதுப்பொலிவு பெறும். தேவர்களும் மனிதர்களும் ஒனறு சேர்நது, கூடிக்களித்திடும பெருவிழா இபபிரமமோத்ஸவமாகும். இவ்விழாவினைப் பெரிய அளவில திருமலை திருப்பதி தேவஸதானம் ஒவ்வொரு ஆணடும, தகுந்த ஏறபாடுகளை மேறகொணடு, நடததிவருவது நாடறிநததே. இவ்வாண்டு மேலும் பல புதிய மாறறப்பொலிவுகளுடன, திருமலை பகதரகள தஙகள வாழ்நாளில் காணக்கிடைக்கா வாயப்பாக அமைந்திடும வகையில, இபபிரமமோத்ஸவம் கொண்டாடப்பட உள்ளது.

மூலப்பொருளான அவ்வேங்கடவனின் 'பிரம்மோதஸவ' விழாவில - தேவரகள யாவரும் பங்கேற்கும் இவ்விழாவில் - வேதமலையாம் ஏழுமலைகளில் கொண்டாடபபெறும் விழாவில் - பங்கேறறு, பல்வேறு வாகனஙகளில எழுநதருளி திருமலையில உலாவரும அலர்மேல் மங்கை மணாளனின திருவருள பெற்று மகிழ்ந்திடுமாறு பக்தரகளை - யாத்திரிகர்களை திருமலை திருப்பதி தேவஸ்தானம இருகரம் கொணடு அழைககினறது.

என். ரமேஷ்குமார்
செயலாடசித தலைவர் மறறும்
சிறப்பாசிரியர
தி.தி. தேவஸதானம - திருபபதி.



## திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி திருக்கோயில்

# வருடாந்திர பிரம்மோத்ஸவம்

(25--9--95 முதல் 4--10--95 வரை)

## நிகழ்ச்சி நிரல்கள்

| நாள | கிழமை | வாகனங்கள் பகல உத்ஸவம் | இரவு உத்ஸவம் |
|---|---|---|---|
| 25--9--95 | திங்கள | -- | சேனாதிபதி உத்ஸவம் அங்குரார்ப்பணம் |
| 26--9--95 | செவ்வாய் | வைர அங்கியுடன் கூடிய ஆபரணங்களுடன தங்கத்திருச்சி வாகனம் துவஜாரோஹணம் | பெரியசேஷ வாகனம் |
| 27--9--95 | புதன் | சிறிய சேஷவாகனம | ஹம்ஸ வாகனம் |
| 28--9--95 | வியாழன் | சிங்க வாகனம் | முத்துப்பந்தல் வாகனம் |
| 29--9--95 | வெள்ளி | கல்பவிருக்ஷ வாகனம | ஸர்வ பூபால வாகனம் |
| 30--9--95 | சனி | பல்லக்கில்மோகினி அவதார உதஸவம் | மகரகண்டி, லக்ஷ்மீஹாரம் போனற அரிய ஆபரண அலஙகாரங்களுடன் கருட சேவை |
| 1--10--95 | ஞாயிறு | அனுமான் வாகனம் மாலை வநதோதஸவம் | யானை வாகனம் |
| 2--10--95 | திஙகள | சூரயபபிரபை வாகனம் | சநதிரப்பிரபை வாகனம |
| 3--10--95 | செவ்வாய | திருத்தேர | குதிரை வாகனம் |
| 4--10--95 | புதன் | பலலககு உதஸவம் திருசசி வாகனம் தீர்த்தவாரி அவபிரதோத்ஸவம சக்ர ஸ்நானம் | திருச்சியில துவஜாவரோஹணம் |

# விண்தோய் சிகரத் திருவேங்கடம்

திரு. லா. ஸ்ரீநிவாஸன் - புதுதில்லி.

**உண்டாயுறிமேல் நறு நெய்யமுதாக**
**கொண்டாய் குறளாய் நிலமீரடியாலே**
**விண்தோய் சிகரத்திருவேங்கடம் மேய**
**அண்டா! அடியேனுக்கருள் புரியாயே!**
(பெரிய திருமொழி 1-10-4)



என்பது திருமஙகையாழவாரின திருவாக்கு. திருவேஙகடமலை பூமண்டலத்திலேயே உளளதாகையாலே நம்போன்ற மனிசரகள் சென்று ஸேவிபபதறகுப பாங்காயிருப்பதுபோல, "விண்தோய சிகரத் திருவேஙகடம" ஆகையாலே, நித்ய ஸூரிகள் வந்து ஸேவிப்பதறகும் பாஙகாயிருக்குமெனறு காட்டினபடி. ஆனது பற்றியே "வானோரககும் மண்ணோரக்கும் வைப்பு" (நான்முகன் திருவந்தாதி 45) என்று திருமழிசைபபிரானும், "மந்திபாய் வடவேஙகடமாமலை, வானவர்கள் சநதிசெயய நின்றான" (அமலனாதிபிரான-3) என்று திருப்பாணாழ்வாரும் அருளிசசெய்தது. நிதயஸூரிகள் பரதவததிலே ஸரவகாலமும் பழகினவர்களாகையாலே, ஸௌலப்யததைக் காண விரும்பி வருவார்கள்; மனிசரகள பரத்வத்தைக் காண விருமபிச செல்வார்கள்; இரண்டு குணஙகளும் அங்கே குறையவறறவை என்று இப்பாசுரததினால் காட்டினாராயிற்று.

ஆகாயம் வரையில சென்று ஓங்கின சிகரத்தையுடையது திருவேங்கடமலை எனபதை ஆழ்வார்கள் பலவிதமாகக் காணபித்துளளனர். இவ்வாழ்வாரே "விண்ணுற நீள் சிகர விரையார திருவேஙகடவா", "ஆகாசத்தை அளாவி உயர்ந்திருக்கிற கொடிமுடிகளையுடையதும் பரிமளம் மிக்கதுமான திருவேஙகடததுக்கு அதிபதியே" (பெரிய திருமொழி 1-9-6) எனறருளினாரர். மேலும, "விலங்கல குடுமித் திருவேஙகடம்" (பெரிய திருமொழி 1-10-2), மேலே ஸஞ்சரிக்கிற சநதிர ஸூரியரகள் விலகிப போக வேணடும்படியான உயர்ததிப பொருநதிய சிகரத்தையுடைய திருவேங்கடம", எனறும காட்டியருளினார். "விண்தோய் சிகரத் திருவேஙகடம" (பெரிய திருமொழி 1-10-4) பரமபதம் வரை

யில் சென்று ஓங்கின சிகரத்தையுடைய, என்பதும் காண்க.

பேயாழ்வார் மூன்றும் திருவந்தாதியில் (40) "விண்ணெடுங்கக் கோடுயரும் வீங்கருவி வேங்கடததான்" என்றருளியதும் காணத்தக்கது. மேலுலகஙகளெல்லாம் ஒரு மூலையில் ஒதுங்கும்படி சிகரங்களை உயர்ந்தோங்கியிருக்கப் பெற்றதும், நிறைந்த அருவிகளையுடையதுமான திருமலையில் எழுந்தருளியிருப்பவன என்றபடி.

ஆகாயம் வரையில் சென்று ஓங்கின சிகரத்தையுடையது திருவேங்கடமலை என்பதை "சேணுயர் வேங்கடத்தை" (நான்முகன் திருவந்தாதி 42), "மங்குல்தோய் சென்னிவடவேங்கடத்தானை" (நானமுகன்திருவந்தாதி 43), "செனனியோங்கு தண் திருவேங்கடமுடையாய்!" (பெரியாழ்வார் திருமொழி 5-4-1) முதலிய இடங்களிலும காணலாம்.

இந்த ஒரே கருத்து திவ்ய கவிபிள்ளைப் பெருமாள் ஐயங்காரின் திருவேங்கடமாலையில் பல பாசுரங்களாகப் பரிமளிப்பது அவரது அபூர்வ கற்பனா சக்தியை தமக்குக் காட்டி நம்மை மகிழ்விக்கிறது. அப் பாசுரங்களின் முன பாதிகள் திருவேங்கடத்தை வர்ணிப்பதாக அமைந்துள்ளன. அப்பகுதிகளை மட்டும் இங்குக் கொடுத்து விளக்கம் தருகிறோம.

வாடப்பசித்தவரியுழுவை வாலாட்டி
மேடத்தைப் பார்த்துறுக்கும்
வேங்கடமே (16)

வாட்டமுண்டாம்படி பசியடைந்துள்ள, உடல் கோடுகளையுடைய, புலி வானத்தில் செல்லுகிற ஆட்டின்வடிவமான மேஷ ராசியைப் பார்த்து அந்த ஆட்டைக் கொன்று தின்னக்கருதி தன்வாலை அசைத்துக்கொண்டு கோபித்து, அதனோடு, மாறுபடுதற்கு இடமான திருவேங்கடம் எனறபடி. பசித்தபுலி ஆட்டுக்கடாவை நோக்கி அதனைக் கொல்லச் சீறி முயலுதல் இயல்பு. திருவேங்கடமலையிலுள்ள புலி வானத்து மேஷ ராசியைப் பார்த்து உறுக்குமென மலையின் உயர்ச்சியை உணர்த்தியபடி. மற்ற செயயுட்களிலும் இதுபோல் மறைமுகமாக வேஙகடத்தின உயர்சசி உணர்ததபபட்டிருப்பது அறிக.

இத்துடன் மூன்றும் திருவந்தாதி(75)யும் சேர்த்து அநுபவிக்கத் தக்கது. அது வருமாறு

சார்ந்தகடு தேய்ப்பத் தடாவிய
கோட்டுச் சிவாய்
ஊர்ந்தியங்கும் வண்மதியினொண்
முயலை-சேர்ந்து
சினவேங்கை பார்க்கும் திருமலையே,
ஆயன்
புனவேங்கை நாறும் பொருப்பு.

ஆகாசத்தில் திரிகினற சந்திரன் திருமலையின் சிகரநுனியில் தனது கீழ்வயிறு தேயும் படியாக இதில் ஸம்பந்தப்பட்டுக்கொண்டே செல்கினறானாம. அப்போது அவனது மடியிலிருக்கின்ற முயலைத் திருமலைமீது திரிகின்ற வேங்கைப் புலி கண்டு அதனைத் தன் உணவாகக் கொள்ளக் கருதி, பிடித்துக்கொள்ளவும் மாட்டாமல் விட்டுப்போகவும் மாட்டாமல் உறுத்துப்பார்த்தபடியே நின்றதாம். சந்திரமண்டலத்தில் கறுப்பாகத் தோன்றுவதை மானாகவும் முயலாகவும் கவிகள் வர்ணிப்பது மரபு.

அடுத்தபடியாக,

தாவிவரும் வானரங்கள் தண்
குவட்டில் கற்கடகம்
மேவிவரக் கண்டோடும் வேங்கடமே.
(திருவேங்கடமாலை 17)

நண்டுவடிவமான கர்க்கடராசி குளிர்ச்சியான திருவேங்கட சிகரத்தில் பொருந்தும் போது, தாவிக்கொண்டே வருகிற குரங்குகள் அதைக் கண்டு அஞ்சி ஓடுகினறன என்றபடி.

மூன்றும் திருவந்தாதி (58) பாசுரததையும் இத்துடன சேர்த்து ரஸிக்கலாம். அதுவருமாறு.

தெளிந்த சிலாதலத்தின்
மேலிருந்த மந்தி
அளிந்த கடுவனையே நோக்கி-
விளங்கிய
வெண்மதியம் தா என்னும்
வேங்கடமே

திருமலையின் சிகரம் சந்திர மண்டலத்தளவும் ஓங்கியிருக்கிறதென்ற அதிசயோக்திக்காக ஒரு வர்ணனை கூறுகிறார் ஆழ்வார். திருமலையில் கற்பாறையின் மீது பெண் குரங்கு உட்கார்ந்து கொண்டிருக்கிறது. அதனருகில் ஆண்குரங்கும், 'நமது பேடை நம்மை ஏவிக்காரியம் கொளவது எப்போதோ?' என்று அதன் கட்டளையை எதிர்ப் பார்த்துக் கொண்டு நிற்கிறது. அதனை நோக்கிப் பெண் குரங்கானது 'முகத்தினழகைப் பார்த்துக் கொள்வதற்குக் கண்ணாடி கொண்டுவந்து தா' என் பாரைப் போல, 'பூர்ணசந்திரனைப் பறித்துத்தா' என்கிறதாம். இங்ஙனே சொல்லுபடியாக ஓங்கியுள்ளது திருமலை என்றபடி.

அடுத்தபடியான ஐயங்கார் பாசுரம்-

*ஒண் சிந்துரத்தை வெறுத்தூடும் பிடிவேழம்*
*விண்சிங்கம் கண்டணைக்கும் வேங்கடமே* (18)

ஒளியுள்ளதான ஆண் யானையை வெறுத்துப் பிணங்குகின்ற பெண்யானையானது வானத்தில வருகின்ற சிங்கவடிவமான ஸிம்ஹ ராசியைப் பார்த்து அச்சங்கொண்டு ஆண்யானையைத்தானே வலியச்சென்று தழுவுதற்கு இடமான வேங்கடம் என்றபடி. களிற்றினிடத்துக் குற்றத்தைக் கற்பித்து அது காரணமாக அதனிடம் வெறுப்புக் காட்டிப் பிடி ஊடி விலகி நிற்க, ஸிம்ஹராசியைக் கண்டதனால் அதைச் சிங்கம் என்று நினைத்து அஞ்சி, அவ்வச்ச மிகுதியால் ஊடலை மறந்து தானே ஓடி ஆண யானையைப பற்றுக்கோடாகக் கொணடு அதனைத் தழுவியது என்றபடி. ஸிம்ஹராசி திருமலையின் வெகு அருகில் இருந்ததைக் காட்டியபடி.

*மாதுமடக்கன்னி கழை வந்தணுகிக் கம்பத்தின்*
*மீதுநடிப்பாளொக்கும் வேங்கடமே* (19)

அழகையும் மடமையையுமுடைய இளம் பெண் வடிவமான கன்யாராசி மூங்கிலுக்கு நேராக வந்து பொருந்தும்போது, நாட்டியக் கழைக்கோலின் மேல் ஏறிக் கூத்தாடும் மங்கையை ஒத்தது போலுள்ளது. அப்படிக் கன்யாராசி வரை உயர்ந்த வேங்கடம் என்றபடி.

*மன்னுகுடிக் குறவர் வானூர் துலாத்திடையே*
*மின்னுமணி நிறுக்கும் வேங்கடமே* (20)

குறிஞ்சி நிலத்து நிலைபெற்ற குடிகளாகிய குறவர்கள வானத்தில் செல்லுகிற நிறைகோல் வடிவமான துலாராசியினடத்திலே ப்ரகாசிக்கிற ரத்னங்களை வைத்து நிறுத்தி எடை அறிதற்கு இடமான வேங்கடம என றவாறு திருவேங்கடமலையில் ரதனஙகள் உள்ளதையும காட்டியபடி.

*கொல்லைக்குறவர் குளிர்மதி மானைக் ககன*
*வில்லை குனித்தெய்யும் வேங்கடமே* (21)

தினைக்கொல்லையைக் காக்கினற குறவர்கள் குளிர்ந்த சந்திரனிடத்துள்ள களங்கத் தோறறமாகிய மான்வடிவத்தினைப் பயிரை மேய வருகின்ற மான் என்றெண்ணி, வானத்தில் காணப்படுகின்ற வில்வடிவமான தனுர ராசியைக் கை வில்லாகக்கொணடு வளைதது, அது கொண்டு அம்பு எய்ய முயல்வதறகு இடமான வேங்கடமே எனறபடி.

*தேனேறித் தேன் வைக்கும் திண் கழைமேல விண் மகர*
*மீனேறி வேள்கொடியாம் வேங்கடமே- வானேறித*
*தீமுகனாகத திருப்பார் சேவடிக் காளான வரைக்*
*காமுகனாகத் திருப்பார் காப்பு.* (22)

வண்டுகள் உயரப் பறந்து சென்று சேரந்து தேனைச் சேர்தது வைக்கப் பெறற மூங்கிலின் மேல வானத்தில் செல்லுகிற சுறுமீன வடிவமான மகர ராசி வந்து தங்குகையில், மன்மதனது த்வஜம போலத் தோன் றபபெற்ற வேங்கடமே, விஷாக்னியைச் சொரியும முகஙகளையுடைய ஆதிசேஷன் மீது ஏறி வீற்றிருப்பவரும், தமது சிவந்த திருவடிகளுக்கு அடிமைப்பட்டவர்களைக் காமமுடையவராகச் செல்லவிடாதவரும் ஆகிய திருமால் உயிர்களைப் பாதுகாக்குமிடம் என்றபடி. "தேனேறித் தேன் வைக்கும் திண் கழை" என்று மலையின் மூங்கிலை அடைமொழி கொடுத்துச் சிறப்பித்தனால், மலையின் வளத்தை விளக்கியபடியாயிற்று. வானத்தையளாவி மிக ஓங்கி வளர்ந்துள்ள மூங்கிலுக்கு நேராக வருகிற மகர ராசி, மன்மதனுடைய த்வதண்டத்தின் மேல் காணப்படுகிற சுறுமீன் வடிவம் போலும் என்கிறர். ஆதிசேஷன் மேல் கண் வளரும எம்பெருமானுக்கு புஜங்கன் என்று பெயர். அச்சொல்லுக்குக் காமுகன் என்றும் பொருளுண்டு. தான் புஜங்கனாய் (காமுகனாய், அநந்தசயனனாய்) இருந்து கொண்டு மற்றவர்களைக் காமுகனாக்க மாட்டார் எனற நயம் காண்க. வேங்கடம் மன்மத த்வஜம் போல் காணப்பட்டாலும், வேங்கடவன் தன்னடியார்களை மன்மத வலையில் சிக்கவிடமாட்டான் என்று கூறியுள்ள அழகும் சுவைக்கத்தக்கது.

*ஒண்கொம்பில் தேனிறூலர் பிறைக்கோட்டாலுடைந்து*
*விண் கும்பம் வாய் நிறைக்கும் வேங்கடமே* (23)

ஓங்கி விளங்குகின்ற மரக்கொம்புகளில் கட்டப்பட்டுள்ள தேன் கூண்டு வானத்தில் செல்கிற பிறைச்சந்திரனது வளைந்த வடிவமாகிய கொம்பு படுதலால் உடைந்து, வானத்திலுள்ள குடவடிவமான கும்பராசியின் வாயளவும் தேனைச் சொரிந்து நிறைத்தற்கு இடமான வேங்

கடம் என்றபடி. திருவேங்கடம லையிலுள்ள கொம்பு கும்பரா சிக்கு மேலுள்ளதென்றும் தன் மீது பிறைச் சந்திரன் படப் பெறுகிறது என்றும் கூறி யதனால் அதனது உயர்வை விளக்கி மலை வளத்தையும வர் ணித்தபடி.

கூனவிளவெண் குருகு
கோனேரியில் விசும்பூர்
மீன' நிழலைக் கொத்தும்
வேங்கடமே (24)

கழுத்து வளைவையுடைய இள மையான வெண்ணிறமுள்ள குருகு என்னும் நீர்ப்பறவை கோனேரி தீர்த்தத்தில் வானத் தில் செல்கிற மீன் வடிவமான மீனராசியினது நிழல் தெரிய, அதனை அந்நீரில் செல்லுகிற உண்மையான மீனென்று கருதி உண்ணும் பொருட்டு அதை மூக்கினால் கொத்து தற்கு இடமான வேங்கடம் என் றபடி.

மண்மூலம் தாவென்று மந்தி
கடுவற்குரைப்ப
விண்மமூலம் கேட்டேங்கும்
வேங்கடமே (25)

'மண்ணிலிருக்கிற கிழங்கை உண்ணுவதற்காகப் பெயர்த்தெ டுத்துக்கொடு' என்னும் பொரு ளில் 'மூலம்தா' என்று பெண் குரங்கு ஆண் குரங்கை நோக் கிச் சொல்ல, வானத்திலுள்ள மூலநக்ஷத்திரம அச்சொல்லைக் கேட்டுத் தன்னைப் பிடிததுக் கொடுக்கச்சொன்னதாகக் கருதி அஞ்சிக் கலங்குதற்கு இடமான வேங்கடம் என்றபடி. மந்தி "மூலம்தா" என்று வேண்டிய தனால், அதனிடநது மிக்க அன்பு கொண்ட கடுவன் தன் னைப் பிடித்து மந்தி கையில் கொடுத்துவிடுமே என்று மூலந க்ஷத்திரம் அஞ்சும் என்றபடி.

இவ்வர்ணனையில் அம்மலை வானத்து நக்ஷத்திர வீதிக்கு அருகாம்படி ஓங்கியது என்ப தோடு, அம்மலைக்குரங்கு தேவ கணமும் அஞ்சத்தக்க வலிமையு டையது என்பதும் விளங்கும்.

நாலவிட்டப் பொன்னூசல் நன்னு
தலாருந்து தொறு
மேலவிட்டத் தொட்டிழியும்
வேங்கடமே (26)

தொங்கவிடப்பட்டுள்ள பொன் னாலாகிய ஊஞ்சல், அழ கிய நெற்றியையுடைய மகளிர் வீசித்தள்ளி ஆட்டும் தோறும் வானத்திலுள்ள அவிட்டநக்ஷத் திரத்தின் மீடு பட்டு இறங்கு தற்கு இடமான வேங்கடம் என் றபடி.

திருவேங்கடமலை வானோங் கியுள்ளது என்ற ஒரு கருத் தைத் தமது பற்பல கற்பனை களால் மூதலிக்கும் திவ்யகவி பிள்ளைப்பெருமாள் ஐயங்காரின் கவிநயத்தையும் சாதுர்யத்தை யும் கண்டு பரவசமாகிறோம்.

*********

## பிரம்மோத்ஸவம் அன்று...!

திருமலையான் கோயிலுக்கென்று பொன்னும், பொருளும், நிலங்களும் அன்றைய அரசர்கள், பொதுமக்கள் வாரி வழங் கியுள்ளனர். இறைவனுக்கென்று பலவேறு காலக்கட்டங்களில் விழாககள் பல எடுப்பிததனர். இவ்வகையில் 'உதஸவங் கள்' எனும் இவ்விழாககள் பற்றிய செய்திகளை, கோயில மதில் சுவர் கல்வெட்டுக்களிலிருந்துதான நம்மால் பெறமு டிகிறது. திருப்பதியை அடுத்துள்ள திருச்சுகனூர் என்று அன்று அழைக்கப்பெறற இன்றைய திருச்சானூர் கோயில் மதில் சுவர் கல்வெட்டுகளிலிருந்து திருமலைக்கோயில் விழா பற்றிய முதல் செய்தியினைக் காணுகின்றோம். பல்லவ அர சர்களான கோ விஜயதணடி விக்ரமவர்மனின 51ஆவது ஆட்சி ஆண்டில் அதாவது கி.பி. 830இல, திருமலை வேங்கடத்து எம்பெருமானடிகள கோயிலில், புதியதாகச் செய்யப்பட்ட உத் ஸவ மூர்த்தியின் முன் திருவிளக்கு ஒளறினை இருத்திட 40 கழஞ்சு பொன் சோழநாட்டைச் சாரந்த சோழனூர உலகப் பெருமானாரால வழஙகப்பட்டது. இதற்கு அடுத்து சுமார் 100 ஆண்டுகளுக்குப்பிறகுதான், மறறொரு உத்ஸவமூர்ததி பிர திஷ்டை செய்யப்பட்ட செய்தி தெரியவருகிறது. இவ்வெள்ளி உத்ஸவ மூரததியானது மணவாளப்பெருமாள எனும் பெயரில் பலலவ நாடடைச் சார்ந்தவரும, சகதி விடங்கள் எனும் மன்னனின் மனைவியுமான 'சாமவை' எனும் அரசியினால் பிர திஷ்டை செய்யப்பட்டது. மேலும் இவ் உத்ஸவமூர்த்திக்கு கிரீடம உளளிட்ட பல பொன்னாபரணங்களும வழங்கி, புரட் டாசி மாதத்தில் நடைபெற்றுவந்த திருக்கோடைததிருநாள (பிரமமோதஸவம்) விழாவிற்கு அடுதது இரணடு நாள் மிக விமர்சையாக, இரணடுநாள் உதஸவம நடப்பித்தாள். மேலும் இதே உத்ஸவர்க்கு மீண்டும் அதே ஆண்டில் மார்கழி திரு வாதசிககு முன்பு ஏழு நாடகளுககு காலையிலும் மாலையிலும் வாகன ஏறபாடு செயது விழா எடுப்பித்ததாகவும கல்வெட்டுச் செய்திகள் உறுதிபடுததுகின்றன.

# திருமலைக்கோயிலின் எழில்மிகு பெருவிழா

திரு. அ. நடராஜன் திருப்பதி.



### வேத புராணங்களும் பிரம்மோர்சவமும்

முதலும் முடிவுமில்லாத வேதங்களில கூறபபெறறுளள தொரு வேளவியின் உருவமே திருமால உறையும் திருமலை. அவ்வேழுமலை அவ்வேளவிககு ரிய ஏழு தேவதைகளின வடிவமே ஆகும. தேவரக ளின்· விழுமிய செலவமனைத தையும திரட்டிககொணடது மறறொரு தேவதை அவுணரக ளிடமிருந்து அதைக காப்பதன பொருட்டு. ஆக, இவவெட டுததேவதைகளைக ’ குறிபபிடும முகமாக நடைபெறும திருவி ழாவே திருமலைப பெருவிழா என அழைக்கப்பெறுகினறது.

திருமலை தேவரகளுடன் தொடரபுடையது எனவும், பாற் கடலின் பரந்தாமன திரு மகளைப் பிரிந்த நிலையில அத்திருமகளைததேடித் திரும லைக்குப் போநதான என வும், திருமலையின் பெருமை யினை நாரத முனிவரிடமி ருந்து தெரிநது கொண்ட் திரு வளர்சசெல்வன அங்கு அர்சசை வடிவில அவதரிக்கத திரு வுள்ளம் கொணடு, ஆதி சேஷன், வைகுணடததினின் றும் கொணர்ந்து நிறுவிய ஆநந்த நிலைய விமானததின கீழ் அமரந்து, இறையடியார களின் இடரகளைந்து, அவரக ளின் கோரிக்கைகளைத தீரதது நிறைவேறறி அவரகளை வாழ விக்கின்றன எனவும் பற்பல புராணங்கள கூறும. எடுத துககாட்டாக, பவிஷயோததர புராணத்தில பிரமம தேவனே, அனைதது முனிவர், அரசர, இறையனபர ஆகியோருடன் திருமலையில கனனிததிஙக ளில அமாவாசைககு மறுநாள வைகானஸ முறை அரசசகரக ளைக கொணடு ‘அஙகுராரபப ணம’ என்னும் திருமுளைச சடங கினைச செயவித்து, இரண்டா வது நாளில இரததினஙகளி னால் இழைககபபெறற திருச் சிவிகையில ஸ்ரீநிவாஸரை எழுந்தருளசசெயது திருவீதிவ லம் வநது திருக்கொடியினை ஏறறி விழாவினைத தொடங கினார எனவும், அடுதது ஒன பதுநாள் நாளதோறும காலை, மாலை இருபோதும பலவேறு வாகனஙகளின மீது மலையப பன் இரு நாசசியாரகளுடனும திருவீதி உலா வநதார என வும, பதினோராவது நாள புஷ பயாகம நடைபெறறது என வும கூறபபடடுளளது. (இப போது, இபபுஷபயாகம பிரம மோறசவததுடன நடததபபெ றுவதிலலை; தனியாக நிகழத தபபெறுகினறது.) இவவுறச வம பிரமமாககளின எண ணிககையான ஒனபது எனனும எணணிககை கொணட தினங கள நடைபெறுவதாலும மக களின் அனைதது விருபபஙக ளையும நிறைவு செயதலாலும பிரமமோறசவம என அழைககப பெறுகினறது எனபது ஆமக சாததிரததின கூறறு.

### வரலாற்று நோக்கில் பிரம்மோர்சவம்

ஆலயஙகளில நடைபெறும திருவிழாககள மூவகைபபடும். கட்டாயமாகச செயய வேண டியவை; சிறபபு வைபவஙகளை

முனனிட்டுக கொணடாடப்படு பவை; விருபபஙகள நிறைவே றும பொருட்டுச செயயபபடு பவை. ஆகமஙகளில விதிககப பட்டுள்ள முதலவகை விழாக களை நடததாவிட்டால அது தவறு; தீஙகும ஏறபடும இவ வகையினைச சேரநததே பிரம மோறசவம எனனும பெருவிழா இவவிழாவினைக கொணடாடு தல நாட்டில மழை, அமைதி, உடலநலம், வளம், முனனேற றம ஆகியனவறறை அளிபபதா கக கருதபபடுகினறது. மேலும், விழாககாலங்களில் உறசவமூரத திகள வீதிவலம வருவதால கோயிலுககுச செலலமுடியாத வயது முதிரநதோர, நோயுற றோர முதலியோரும இறைவ னைக கணடுகளிதது இனபுற முடிகினறது.

பிரமமோறசவம முதனமுதலா கக கிபி 966-ல நடைபெறறதா கவும அது பததுநாள கொண டாடபபட்டதாகவும தெரிய வரு கினறது முதலநாளனறு 'திருமுளை' (அஙகுராரபபணம) மாலையில வீதி உலாவுடன தொடஙகியதாகவும், அனறிரவு 'திருமுளை' நடைபெறறதாகவும அறிகினறோம மறுநாள மாலை கொடிமரததில திருககொடி ஏற றபபட்டுதகொடரநது ஒவவொரு நாளும காலையிலும மாலையி லும திருவீதி உலாவும 'திரு முளை' நாளிலிருநது பததாவது நாள நிறைவுநாளனறு 'தீரத தவாரி'யும நடைபெறறன

பலலவ அரச குமாரி யான சாமவை தொடஙகி யது இரணடு பிரமமோறச வஙகள (புரட்டாசி, மாரகழி) பினனர, சிததிரையில (கிபி. 1254), பஙகுனியில (வீரநரசிங கன ஏறபடுததியது), ஆடி யில (கிபி. 1328 திருவேங கட யாதவராயர ஏறபடுத்தி யது), காரததிகையில (புக்கதே வமகாராயர நிறுவியது), மாசி யில (கி.பி. 1388 - அரிகரரா யர ஏறபடுததியது), எனப பிரம் மோறசவஙகளின எணணிககை ஏழாக உயரநதது. கி.பி. 1390-ஆம ஆண்டின் கலவெட்டு ஒனறு இவவேழு பிரமமோறச வஙகள் நடநததைக குறிப்பி டுகினறது. பினனர, ஆனி, ஆவணி, தை, ஐப்பசி மாதஙக ளிலும பிரமமோறசவஙகள ஏற படுததபபட்டு அவறறின எண ணிககை பதினோராக இருந தது எனத தெரிகின்றது. எனினும், ஆலயம கிழககிநதி யர கமபெனியின நிருவாகத தில இருநத போது புரட்டாசி யில நடைபெறும திருவிழாவும், மூனறு ஆணடுகளுக்கு ஒரு முறை சாநதிரமான கணக்குப படி (அதிகமாகவும) வருமபோது இரணடாவது பிரமமோறச வமும மட்டும நடைபெற்றன. அவவாறே இன்றும நடந்து வருகினறது.

கிபி. பததாம நூறறாண டிறகுப பிறகு பதினாலாவது நூறறாணடில (கிபி 1392) தீரததவாரிககு மறுநாள் 'விடை ஆறறி' உறசவமும சேரககபபட்டது. புதிய உறசவரான 'மலை குனிய நினற பெருமாள' (மலை யபபன) கி.பி 1339இல விழாக கணடார திக்குபபாலகரகளான தேவதைகளுககு விடையளிககும விழாவே 'விடை ஆறறு' விழா. பினனர இவ 'விடை ஆறறு' விழா இருதினஙகள நடநததாக வும தெரியவருகினறது. 'பிரம மோறசவம்' பதிமூனறு தினங கள வரைகூட நடைபெறறதா கக தெரிகினறது எனினும், இபபோது 'திருமுளை' (அஙகு ராரபபணம), 'சகரஸநானம' என னும இரு தினஙகள நீஙகலாக, எட்டு நாட்கள இவ்விழா மிகச் சிறப்பாக நடைபெறறு வருகின் றது. (இவ்வெட்டின் முக்கி யத்துவததினைக கட்டுரையின் துவககிததிலேயே கண்டோம்.)

### விழா விவரங்களும் வாகனங்களும்

ஆணடுதோறும கனனிததிங களில (ஆசவியுஜ மாதத்தில்) வளரபிறையில திருவோண நட்சததிரததில 'சகர ஸநானம' நடைபெறும வகையில், ஒன பது நாள முனனதாக 'கொடி யேறறம்' நிகழும். 'கொடி யேறற'ததிறகு முதல்நாள் 'திரு முளை' (அஙகுரார்பபணம்) செய யப்படும. அனறு மாலை சேனாதிபதி அலலது விஷ்வகஸேனருககு நான்கு வீதி களிலும உறசவம நடைபெ றும. புனித மண எடுத தல எனனும 'மருதஸஙகர ஹணம' நிகழும பின்னர், ஒனபது நாட்களில முதலாவது நாள கருடனின் உருவம் வரை யபபெறற 'திருக்கொடியேறறம்' நடததபபெறறு ஒவ்வொருநா ளும் குறிபபிட்ட வாகனஙகளின் மீது பெருமாள் இருதேவியரு டன திருவீதி உலாக் கண் டருளுவார திருக்கொடியேற் றததின போது 'வஜ்ர கவசம' அணிநது பெருமாள் காட்சிய ளிபபார. அனறிரவு பெரிய சேஷ வாகனம. மறுநாள காலை சிறிய சேஷ வாக னம மாலை ஹமஸம என்னும அன்னவாகனம. அடுத்த நாள காலை சிமமவாகனம, மாலை முததுபபநதல வாகனம. நான் காம நாளனறு காலை கல்ப விருக்ஷ (கறபகத்தரு) வாக னம; மாலை சரவபூபால வாக னம. ஐந்தாவதுநாள திருவிழா வின முககியமான நாளாகும். அனறு காலை பலலககில வேங்

கடநாதன மோகினி அவதாரமா கப பலலககில பவனி வரு வார; இரவுதான அனைதது அடியாரகளும கணடு மகிழக காததிருக்கும கருட சேவை இக கருடோற்சவததின் போது மூல வருககு அணிவிககபபெறறுளள மகர கணடிகை, லக்ஷமீ ஹாரம எனனும திருவாபரணஙகள உற சவருக்குச் சாத்தபபெறறு திரு வீதி உலாநிகழும. அனறு பிற பகலில் ஒரு சிறபபு நிகழசசி எனனவெனில, செனனையிலி ருநதுத தனி ஊரவலமாக பெருமாளுக்குச சமரபபிபபதற காகக குடைகள எடுததுவரப்

பெற்று தேவஸதான அதி காரிகளினால தக்க மரியாதை களுடன ஏறறுககொளளபபடும ஆறுவது நாள காலை அநு மன வாகனம; மாலை வசந தோறசவம; இரவு யானை வாக னம. ஏழாவது நாள காலை சூரியபபிரபை வாகனமும் சந திரபபிரபை வாகனமும எட டாவதுநாள காலை எவ வகை வேறுபாடுமினறி அடி யார திருககூட்டததினர அனை வரும் கலநது கொளளும திருத தேர; இரவு குதிரை வாக

னத்தின மீது கோலாகலமாக எழுநதருளுவார திருமலையப பன. ஒனபதாவது நாள காலை பலலககில் எழுநதருளி சுவாமி புஷகரிணியில சகர ஸநானம நடைபெறும. அதுபோது பக தரகள அனைவரும திருககுளத தில முழுகிப் புனிதம் பெறுவர. இரவு திருச்சிவிகையில எழுநத ருளி, கொடியிறககம காணுவார திருவேஙகடநாதன. வாகனங களின வரையறுபபு குறிததுத திடடவடடமான சாததிர விதி கள எவையும இருப்பவனவாகத தெரியவிலலை.

## இரண்டாவது பிரம்மோற்சவம்

மூனறுணடுகளுககு ஒருமுறை நிகழும இரணடாவது பிரம மோறசவததின போது கொடி யேறறம, திருததேர,(மரததேர) கொடியிறககம இருககா திருத தேருககுபபதிலாக வெளளித தேரில பெருமாள விழாககாணு வார.

உறசவகாலஙகளில மாலை வேளைகளில ஊஞசல விழா வும நடைபெறும. இபபோது விழாவின ஒவவொரு நாளிலும சஙகீத நிகழசசிகள, கதாகா லடசேபஙகள, புராண பிரவச னஙகள முதலியனவும பகதர களை ஆகரஷிபபவனவாய ஏறபாடு செயயபபடுகினறன செலவம செழிதது விளஙகும திருமலைக கோவிலின பிரம மோறசவததைக காணபதறகுக கோடிககணகள வேணடும என றால் அது மிகையாகாது திரு மணசெலவன மககள அனை வருககும அருளபாலிததது, வளம சேரதது இனபம பயகக ஏழுமலையானை, வேஙகடவா ணனை வணஙகி, வாழததி நலம் பல பெறுவோமாக



திருமலையான கோவிலுககென பல நிலஙகள, கிராமங கள இனாமாக வழஙகப்பபட்ட செயதிகள கோயில கலவெட்டுக குறிபபுகளிலிருநது தெரிவருகினறன. விஜயநகர அரசாட்சிககு முன்பு ஒரு சில கிராமஙகளதாம கோயிலுககுச சொநதமாக இருநதன. ஆனால விஜயநகரப பேரரசு ஆடசிககாலததில அவ வரசரகள அளிதத நனகொடைகளால திருமலைககோயிலுககுச சுமார 150 கிராமஙகள சொநதமாக இருநதன. இககிரா மஙகளிலிருநது பெறபபட்ட பொருளைக கொணடு கோயில விழாககள், நிதயநைவேததியஙகள, மலரததோட்டப பராமரிப்பு கள, மணடபஙகள, கோபுரஙகள போனற கட்டுமானபபணிகள போனறவறறிறகுச செலவிடப்படடன. தெனனகததை ஆணட இநது அரசரகள காலம வரை, இதுபோன்ற ஏராளமான நிலஙகள, கிராமஙகள கோயிலுககுச சொந்தமாக இருநதன. ஆனால பினனர வநத முகமதிய அரசரகள காலததில படிபபடியாகவும கிழக்கிநதிய கமபெனியாளர ஆடசியில ஒடடு மொததமாகவும கோயில நிலஙகள, கிராமங்கள் தனியாரககுச சொநதமாகிவிடடன. ஆகையால தற்போது 'கட்டிடஙகள்' எனற அளவிலேயேதான, அவை, கோயிலுககு 'நகரா சொத துககளாக' விளஙகுகினறன.

இககோயிலுககுரிய முதல நிலதானம எனபது காடவ நாடடு அரசியான சாமவையால வழஙகபபடடது. திருசசுக னூர எனறு அனறு அழைககபபெறற இனறைய திருசசானூரில உளள ஏழாயிரம குழி (ஒரு நில பரபபளவு) நிலம், அஙகிருநத சபையாரகளிடமிருந்து விலைககு வாஙகபபடடு, திருமலை கோயிலுககுத தானமாக மேறபடி அரசியினால் வழஙகபபட டது.

திருவேங்கடமுடையான்

# ப்ரம்மோத்ஸவ வைபவம்



கலௌ வேஙகடநாயக என்பதற்கு இணஙகக் கணகண்ட தெயவமாய எழுந்தருளியிருககும் திருவேஙகடவனை ஸேவிதது தனயரகளான கோடானுகோடியில ஒருவன். அவனது இன்னருளால் அவனைபபறறியே ஆயிரத்தெட்டு ச்லோகங்களை விணணப்பிதது நிறம் பெறும் நிதயதாஸன். அவனருள் கொண்டு தோன்றியது வேஙகடநாதீயம் எனபதொரு ஸ்தோதர காவியம். நாராயணீயம என்பதற்கேறப ஏறறதன்மையுடையது. அவன புகழ பாட யாரே வலலார!

அதில பரமஹோதஸவததை மையமாகக கொணடு 250 சலோகஙகள இயறறப்படடன. திருமலை அபபனை அப்பொழுது ஸேவிதது அதன அனுபவ பூரவமாய் உளளததெழுநத சில கருததுககளை அவனடியார குழாம அனுபவிகக சிலவறறை இஙகு வரைகின றேன. அவன் புகழ் பாடுவது சொலபவர கேடபவர அனைவருககுமே பெருமைதானே!

இங்கு வாஹனஙகளின் வரிசை இடம பெறவிலலை. அனுபவததை மடடும ஏற்க அனபரகள தயங்கார் எனறு திடமாக எண்ணுகிறேன. இது அடியேன் அவன் திருவடிகளில் ஸமர்ப்பிக்கும் காணிககை.

## சேஷ வாஹனம்

சேஷாத்ரிநாதன் ஆனதால முதலில் சேஷ வாஹனத்தின் சிறப்பினை அனுபவிப்போம். பாற்கடலில சேஷன. திருமலையாய் சேஷன். அந்த சேஷ வாஹனத்தில் எழுநதருளுவது எனனே பொருத்தம்! உலகெலாம் ஸ்ரீநிவாஸனுக்கு சேஷபூதம. இதற்கு எடுத்துக்காடடாக தானே தன் மீது அழகாக ஸ்ரீநிவாஸன் ஸேவை சாதிககுமபடி செய்கிறுன். வினைகள மறைகின்றன. ஸேவிக்கும் நானே நிறம்



ஸ்ரீ உ.வே. வித்வான். ஸேவா.
ஸ்ரீநிவாஸராகவாசாரியர் ஸ்வாமி - சென்னை.

பெறறு விடுகிறேன. பாம்புககு காலில்லை. அனறியும் மலை நகருமோ! ஆதலால் பகதர் கள அநத சேஷனையும சுமந்து எழுநதருளப் பண்ணுவர போலும்! மஹேசவரன் பாமபு களை அணிகலமாகக கொணடான. ஸ்ரீநிவா ஸனை எழுநதருளபபணணுவதுதான தனககு அணிகலம என்று துணிநது ததது்வததை உலகுககு காட்டுவானபோலும். கோணலான கதியுடைய பாமபு நலலவனை ஆசரயிதத தால நலலநிலை அடைநதது. நீ பெருமாளை எழுநதருளப் பணணுகிறாய, நிறம பெறுகி றாய். நாமும் உம்மை அவ்வாறே அடைவோம.

எல்லாம தானே செயயவேணடும். இது சேஷனின நிலை. புணயம் செய்தான, மலை யானான, தனது சிரஸஸினால பாகவதரக ளையும தாங்குவான போலும். மாணிககங களைக் கொணடு பூஷணமாகிறான. அவற றால வெளிசசத்தை உணடு பண்ணி தீவட்டி கைஙகர்யமும பணணுகிறான. சிரஸ்ஸினால் தவழ்ந்து கொணடு குடையாகவும் ஆகிறான. தேவர்கள் சேஷரகளானார்கள். சேஷபீடத தில், பரமனை பிரமன ஸேவிககும் பாகயம் பெறறுவிட்டான. தான சேஷ வாஹனத தையே சுமக்கிறான, தான படைதத மககள வாழ. ஸஹஸர சீரஷா எனபபட்ட தெய வததை தனது மடியில, ஸேவித்தான. தனது ஆயிரம தலைகளாலும் வணஙகுகிறான. துதிககிறான, நானமுகன் வியக்கிறான். பெரு மாள கிரீடததில உள்ள ரததனங்களின் ஒளி கணகளைப் பறிககிறது. தனது மாணிகக ஒளியும் இதறகு நிகரா! கணகளைக் காது களாக மாறறிககொணடு பிரமன் செயயும் வேதபாராயணத்தைக கேட்டு குதூகலிககி றான ஆதிசேஷன. பூமியைத தாஙகுபவன் ஆதிசேஷன. அவன பூதரன. அவன இஙகு மலையானான். அம்மலையையே ஸ்ரீநிவா ஸன தனது இருபபிடமாக்கிக்கொணடுவிட டான். அதனால் உரிமையும் உதஸாகமும் சேஷனுக்கு! இத்தகைய சேஷவாகனததின பொருததம் பெருமையும்தான எனனே!

## ஸிம்ஹ வாஹனம்

* ஸிமஹாத்ரியில் ஸிம்ஹ வாஹனம். மருக ராஜன - ஸ்வதந்திரன. காம்பீரயம் நடை யில். ஸாது ம்ருகஙகள் அடஙகி ஒடுங்கி நடுஙகி ஓடுகினறன. இப்பொழுது நல



லவர்களுக்கு மகிழ்சசி ஸ்ரீநிவாஸனுக்கு வாகனமானான் அலலவா!

* சிங்கமே! உனக்கு ஹரி என்று பெயர. கணடவர் ஓடுகினறனர. உன் பெருமை தான என்னே! உன்னைக்காட்டிலும சீரிய ஹரி ஒருவன இருககிறான். நல்ல குணங் கள உடையவன. அவனைக் கணடதுமே பாபஙகள் எல்லாம விரைநது ஓடுகின றன. தாங்கள அழிவது திணணம என்று திடமாய நினைககின்றன. சாதுக்களை மிரட்டும் நீ நலல அந்த அரியை சீரிய சிஙகத்தைச் சுமந்துவா!

* எழுந்தருளும ஸ்ரீநிவாஸனும ஹரி (சிஙகம்) எழுநதருளபபணணுபவனும் ஹரி. என்ன பொருததம!

* ஒரு பாலனைக் காக்க, அவன அப்பனை அழிக்க சிங்கமுகத்தை ஏறறுக்கொண் டான. முகததில் சிங்கமானதைக் கண்டு, இனப்ரீதி உனக்கு. அதனால உத்ஸாகம, பெருமையெல்லாம். ஆதலால்தான் அவ னுக்கு வாஹனமாகின்றாய் போலும் இது பொருத்தம் தானே!

* க்ரூரமானவனும நலலவனை அடைந்தால் நல்லவனாகிவிடுகிறான். நீயோ ஸ்ரீநிவா

ஸனுக்குத் தொண்டாற்றி இதற்கு உதா ரணமாகிறுய். லக்ஷ்மியும் அஞ்சவில்லை. ஸேவகர்களும் அஞ்சவில்லை. எனது மன தும் அஞ்சவில்லை.

* மலையில ஒரு சிங்கம. அதைச்சுமப்பது மற்றொரு சிங்கம. இதுவோ ஸிமஹாதரி. இவனோ நரஹரி.

* என்ன புண்ணியம் செய்தனையோ! சிங்க மானாய். பக்தியினால் மலையுமானாய். என்ன பாகயமோ ஸ்ரீமானான எங்கள ஸ்வாமியை எழுநதருளப் பண்ணுகிறுய். அதனால் மருகராஜன் என்ற அந்தஸ்து உனக்கு. அன்றியும் வாஹனமானாய். மகிழ்விக்கிறுய். இமமலையில ம்ருகமாய பிறப்பதும் பாகயம்போலும.

* வென்றவனை தோறறவன் சுமக்க வேண் டும். இது கண்ணன் போதித்தது. ஆனால் போட்டியின்றி பகதியினால ஸ்பரத்தையில்லாமல சுமககிறுய. ஆத லாலதான் சாதுக்கள் உனனையே சுமக கினறனர்.

* உலகில் மலைகள உணடு. அங்கு சிங் கங்களும் உண்டு. மனிதர்கள வணஙகும் சிங்கங்களும் உண்டு. இதறகு நிகராக முடியுமா! சாந்தமான இரண்டு சிங்கங்கள் இங்குதானே!

## ஹம்ஸ வாஹனம்

* முனபு அன்னமானான் மறைகளை உபதே சித்தான் ஸ்ரீநிவாஸன். அனன இனமே பெருமை பெற்றது. பிறகு அன்னப்பறவை பிரமனுககு வாஹனமாயிற்று. வெளளை நிறம், சாநத ஸதவம். மேன்மேலும் அதி ருஷ்டம. புணணியபலம. ப்ரஸனனனாய ஸ்ரீநிவாஸனுககு வாஹனமானாய்.

* ஸவச்சமான உருவம். அழகான உடல். அப்பு-அழுககில்லாத நிலை. உலகை மகிழ விக்கும் தன்மை. சூரியனுக்கு நிகரான ஸ்ரீநிவாஸனை ஏறறவன் எனறு ப்ரஸன னனாய் வாஹனமாய் ஏறறு விளஙகுகி றுய.

* நீ ஸாரகராஹி. நீரையும் பாலையும் பிரித்தெடுப்பது உனது சிறப்பு. திருப் பாற்கடலிலுமம ஸாரத்தை ஏற்பவனாதலால் பாலையும் விட்டு ஸ்ரீநிவாஸனை தேர்நது எடுத்துக்கொண்டாய்.

* உனது உடல் வெளுப்பானது உன் ஸத்வகு ணத்தைக் காட்டுகிறது. சுத்தஸத்வனான விஷ்ணுவை நீ ஏந்தி வருகிறுய். ஆனால், ஸ்ரீநிவாஸன் நீலமேக ச்யாமளன். நல்ல வெளுப்பில் நலல கறுப்பு. பெருமாள் தனிபபொலிவை அடைகிறுன்.

* ஹிம்ஸையில்லாதவன், மென்னடையன். ஸாது சித்தததை அபஹரிப்பவன். நீ ஹம் ஸம். நீ ஹம்ஸனை சுமந்து வருகிறுய். பரமஹம்ஸர்கள் உன்னை துதிக்கின்றனர். உள்ளத்தில் ராகம், உடலில் வெண்மை. பாரவையில் கறுப்பு. மலையப்பனுக்கு நீ நிலவோ!

* என்ன வெண்மை! ச்வேத த்வீபத்திலிருந்தா! சநதிரனிடமிருந்தா! ஸத்ய லோகத்திலி ருந்தா? மல்லிப்பூவிலிருநதா! பாற்கடலிலி ருந்தா! சூரியகிரணத்திலிருந்தா! மஹான் களுடைய உள்ளததிலிருந்தா! உமமை ஸேவிக்கவந்த தேவர்களா தரித்த கிரீ டத்தில் தரித்த வஜ்ரகாந்தியிலிருந்தா இவ் வெண்மை பெற்றது!

* நாங்கள் மட்டமானவர்கள். எங்கள் இதயம் கலங்கியது. ஆசையோ பெரிது. நாங்கள் வர வேண்டும் எனறு எணணத்தினால் வர விலலை. இரண்டொரு ஆசைகளை பூர்த்தி பணணிக்கவே பெருமாளை ஸேவிக்கிறோம். எங்களைப் பார்த்த உனக்கு எங்களிடம் சீறறம் ஏற்படுகிறது. ஹம்ஸமே உன்னை வேணடுகிறோம். எங்கள் ஸ்ரீநிவாஸனை மானஸஸரோவரத்துக்கு எடுததுச் சென் றுவிடாதே. இங்கேயே எழுந்தருளப் பண் ணுவாய். மன்றுடிக்கேட்கிறோம்.

## கருட ஸேவை

* அடைந்தவர்களைக் காபபதில் அவஸரம. வேகமாகப் போகவேண்டுமே! உன்னை ஸ்ரீநிவாஸன் வரித்தான். அவனை நீ எழுநதருளப் பண்ணுகிறுய். விந்தையின் புதல்வனே! என்னே பாக்யம்.

* நீ பறவையரசன். அவன் தேவராஜன். நீ தாஸனானாய். உலகுக்கு எடுத்துக்காட்



டானாய். நாங்களும் உம்மை ஸேவிதது தன்யர்களானோம்.

* நீ த்விஜ(பக்ஷி)வரன. உனது தாஸ்யம மிகவும் அழகானது. ஸ்ரீநிவாஸனின இரணடு திருவடிகளையும இரணடு கைக ளால் ஏந்திவருகிறுய்.

* பாம்பினைக் கொணடு தாயை மகிழ்வித் தாய. உணமையறிநதாய். தாயை விடு விததாய். இனறோ பாமபு மலையில பெரு மாளை எழுந்தருளப்பண்ணுவது அழகு.

* வேதாந்தத்தின் உச்சியில விளஙகுபவன. ப்ரம்ஹஸூதரததினால் அறியபபடுப வன. கருடனே நீ வேதஸ்வரூபி, நீயோ வாஸுகியை ப்ரமஹஸூத்ரமாகமுடைய வன. இபபொழுது வேதவெறபில், வேதமய வாஹனத்தில். எனனே கருட ஸேவை!

## ஹநுமத் வாஹனம்

* ப்ராக்ருன ஸ்ரீநிவாஸனை இதயததில் சுமக் கிறுன. அவனும் அநதரயாமியாயி ருநது ஸநதோஷத்தை உண்டு பணணு கிறுன. ஆனால் ஸரவ ப்ராக்ருனான ஆஞ்சநேயன் தனது திருததோளிலே எழுந் தருளப் பண்ணுகிறுன். நமக்கும் ஸேவை சாதிக்கிறுன்.

* ராமனைத தவிர பிறரை சுமக்க மாட் டாயே. அம்மலையப்பனை நீ ராமனாக நினைதது விடடாய். உனது பக்தியினால் ப்ரீதியடைந்த ஸ்ரீநிவாஸன் ராமனாகவே உனக்கு காக்ஷியளித்தான போலும்.

* பிராட்டியைத திருமாரபில் கொண்டான். தனிச்சோலை. முன்நினைவு வருகிறது ஸ்ரீநிவாஸனுக்கு. உன் மீது அமர்ந்து ஸேவை அளிககிறுன். இதற்கு நிகர் உண்டோ!

* தான் தோனறின மலை, அஞ்சனை தாய். இது சொந்த க்ஷேத்ரம. இங்கு ஸ்ரீநிவாஸ னுக்கு பரமமோத்ஸவம். உன் மகிழ்ச்சிக்கும் அளவில்லை போலும்!

## யானை வாஹனம்

* யனை வாஹனத்தில் ஸ்ரீநிவாஸன். கஜேந் திரனானபடியால் பொருத்தம. ஒரு யானை எழுந்தருளபபண்ணும, பல மன் னரகள் பணிந்து நிற்பர்.



* காட்டில் ஸஞ்சாரம். மருக ஜாதியில் போற்றப்பட்டது. பெருமையுடன் உலகை மகிழ்விப்பது. மனனர்கள் ஆனைகளை தங்களது வைபவத்துக்குக் காக்கின்றனர். அந்த யானை தனக்குப் பெருமை என்று இப்பொழுது ஸ்ரீநிவாஸனை எழுந்தருளப் பண்ணி வருகிறது.

* ஆனைகள போரில் வீரர்களைச் சுமக்கின் றன. உனது பிறவியும் ஏற்றம் பெறுமோ! நீ எவ்வாறு அறிவாய். ஆனால் உனது பதில் முனைநதுள்ளான். தேவதருவான கல்ப வ்ருஷமும் அடிமைபூண்டு தனது வைபவம் நிலைக்க தன் நிழலில் ஸ்ரீநிவா ஸனை இருக்கச்செயது ஸர்வதாதா என்ற பெயரை அடைகிறது.

* கலபவ்ருக்ஷம் அனைதகையும அளிக்கிறது. அம்மரத்தில் ஸ்ரீநிவாஸனே நீரும் அமர்ந் துள்ளீர். பூ பழம போல் நீரும் ஒருவரோ!

* தேவ மரங்களில உம்மைக காண இயல வில்லை. கவி உம்மையே தேவ வ்ருக்ஷ மாகப பார்ககிறுன். உணமைதான். தேவ வ்ருக்ஷத்திறகு நீர்தான நிதி. அதனால் தான அனைத்தையும் அளிககிறது. இதை உணர்த்தவே அங்கு நீ ஸேவை தருவது. கல்ப விருக்ஷம் தன்னடியில நின்று வேண்டியதை அளிக்கும். முக்தியை கொடு என்று கேட்டான் ஒருவன். தர இய லாது எனறு கலபதரு கூறிறறு. இது தனக்கு இழிவு என்று நினைதது ஸ்ரீநிவா ஸன் அம்மரத்தின அடியில் அமர்நதான. அப்பொழுது வேண்டினவன் முத்தியையும பெற்ருன். இருவருடைய நிலையும நிலைத தது போலும.

## ரதோத்ஸவம்

* பிரம்ம உதஸவம், அதபுதமான சோபை. புத்தி மிகவும் கூர்மையானது எனறு கூறு வர். ஜன்ம ஸாபல்யம இப்பொழுதுதான் ஏற்பட்டது என்று நீ நினைத்து ஸ்ரீநிவா ஸனை எழுந்தருளப்பணணுகிருய.

* யானையை முதலை கவவிக்கொண்டது. காரணம ஏதாவது இருக்கடடும. ஸ்ரீநிவா ஸனைக் கூவினாய. அவன்தான உன னைக் காபபாறறினான. மறறவரகளுக்குத திறன் இல்லை என்பதை நீ நிரூபித்துவிட் டாய். அன்பினால் அவனை இப்பெரிய திருவிழாவில் சுமந்து தன்யனாகிருய்.

* காதுகள் அகன்றவை. ஏன? அவை அசைநது கொண்டேயுள்ளன. ஏன்? கண கள் மிகச்சிறியவை. ஏன்? கெடடித் தந்தங்கள். பற்கள வெளியே வந்துவிட் டன! மக்களின் வெட்டிப்பேசசில் காதில் விழலாகாது எனறு மறுப்பதற்கோ! ஸூக்ஷ மமான விஷயத்தில் ஆர்வம். பல்படாத வாக்கு சிறந்தது என்பதற்காகவே. பல் கண் காது என்னே இப்புலன்களை அடக்கி யாள்வது. பகவத் விஷயமதான் கேட்க வேண்டும், மறறவை கூடா, உலகில் பாபி களைப் பார்க்கலாகாது. சாப்பிடத்தான் பல்கள் எனபதில்லை.

## குதிரை வாஹனம்

* ஸப்ததந்துக்ருத் எனபது பரமனை. அவன செய்யும் உத்ஸவம. அதுவும் ஸபதமகிரி. (ஏழாவதுமலை)யில. அது ஏழாவதான ஸத்ய லோகததுக்கு ஸமமானது. சூரிய னால் சுமக்கப்பட்ட எம்பெருமான குதிரை வாஹனத்தில். இரு ஏழு உலகங்களுக்கும நாதன எப்படி ஏழுமலை நாதனானான்!



தாழ்வார். இந்த இருவர் ஏற்றிய விளக்கில் ஒருவித கஷ்டநஷ்டமும் இல்லாமல் எம் பெருமானைக் கண்டு கொண் டார் பேயாழ்வார். உடனே அவர் திருவாக்கிலிருந்து பிறந் தது ஒரு செந்தமிழ்ப்பாட்டு. திருவுக்கும் திருவாகிய செல்வ னும், அவன் திருமேனி எழிலும், திருக்கைகளில் தாங்கிய திவ் வியாயுதங்களும் பேயாழ்வாரு டைய உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. உடனே அவன் அழகுக்குப் பல்லாண்டு பாடி னார்.

**திருக்கண்டேன் பொன்மேனி**
**கண்டேன் திகழும்**
**அருக்கன் அணி நிறமும் கண்டேன்**
**செருக்கிளரும்**
**பொன்னாழி கண்டேன் புரிசங்கம்**
**கைக்கண்டேன்**
**என்னாழி வண்ணன்பால் இன்று.**

அந்தக் கடல் நிற வண்ண னான கண்ணன் யார்? உலக ளந்த மூர்த்தியான அந்த உத்த மன் யார் என்ற கேள்விகளுக்கு அவன் திருவேங்கடமுடையானே என்று சான்றோர் பதில்கூறி யுள்ளனர். கோவலூர் இடைக ழியில் ஆனாயனாய் உலகளந்த மூர்த்தியாய்க் காட்சியளிக்கும் கண்ணன் வேறல்ல - குன்ற மேந்திக் குளிர் மழை காத்த ளித்த திருவேங்கடமுடையா னான கண்ணன் வேறல்ல என் பது ஸம்பிரதாயச் சான்றோர் கருத்து. இம்மூவரும் போற்றிய முதல்வன் - முழு மூவுலகா திக்கெல்லாம் முதல் தனிவித் தாய் விளங்கும் திருவேங்கட வனே. இதனை இம்மூவரும் பாடிய திருவந்தாதிப்பாசுரங்க ளால் இனிக் காண்போம்.

**முதலாவார் மூவரே அம்மூவ ருள்ளும்**
**முதலாவான் மூரிநீர் வண்ணன்-**
**முதலாய**
**நல்லான் அருளல்லால் நாமநீர்**
**வையகத்துப்**
**பல்லார் அருளும் பழுது.**

பிரம்மா விஷ்ணு சிவன் என்ற மூவருமே முதன்மை பெற்ற தேவர்கள்தான். இதில் ஐய மில்லை. ஆனாலும் அந்த மும் மூர்த்திகளுக்குள்ளே கடல்நிற வண்ணனான ஸ்ரீமந்நாராய ணனே தலைமை பெற்றிருப்ப வன், எல்லா உலகங்களுக்கும் காரணப்பொருளாய் விளங்குப வன் அவனே. எல்லாரிடத் திலும் வாத்ஸல்யம் நிறைந் தவனான அத்திருமாலின் திரு வருள்தான் நிலையான (சாசு வதமான) நன்மையைத்தருமே ஒழிய வேறு எந்தத் தெய் வங்களின் அருளும் நிலையான நன்மையை நல்கமாட்டாது. எளிய தெய்வங்களால் பெரிய பலன்களை எவ்வாறு கொடுக்க முடியும்? ஆதலினால்தான் "வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பாய்" - க்ஷேமநிதியாயிருக் கக்கூடிய திருவேங்கடமுடையா னாகிய ஸ்ரீமந்நாராயணனைப் பாரததேசத்தின் பல பகுதி களிலிருந்தும் லக்ஷக்கணக்கான மக்கள் வந்து வழிபட்டுப் பேறு பெறுகிறார்கள். "இம்மைக் கும் மறுமைக்கும் பற்றுவான் நாராயணனே" என்று ஆண்டா ளும் கூறியுள்ளாள். ஒப்பு யரவற்ற அழிவில்லாத பேரின் பத்தை இன்னார் இனியார் பாராமல் உயர்வு தாழ்வு கருதா மல் வழங்குபவன் இவ்வேங்கட வாணனே. இதனை வேதாந்த தேசிகருடைய தயாசதக சுலோ கத்தாலும் நன்கு அறியலாம்.

"வேடர்தலைவனான குகன், வானரர் தலைவனான சுக்ரீ வன், வேடுவச்சியான சபரி, எளிய அந்தணனான குசேலன், முதுகுவளைந்த சந்தனக்கூனி என்று இப்படி பட்டியலிட்டு - இவர்களுக்கெல்லாம் உன் திரு வருளாகிய தயையினால்தானே மேலான தன்மை கிடைத் தது" என்று கொண்டாடியுள் ளார் வேதாந்தாசாரியர். "வாத மாமகன் மர்க்கடம் விலங்கு மற் றோர் சாதியென்று ஒழிந் திலை" என்ற பாசுரமும்,"ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது" என்ற ஆழ்வார் பாசுரமும் இக் கருத்தை வலியுறுத்தியுள்ளன.

மேலும், இத்திருமலையைப் பன் பெருமைகளைப் போற் றும் நம்மாழ்வார், திருவாய்மொ ழியில், அத்திருவேங்கடவனைத் தொழுது வணங்கமுடியாவிட் டாலும் அவன் நிற்கும் அம் மலையொன்றைத் தொழுதாலே நம்முடைய பாவங்கள் அனைத் தும் நீங்கும் என்று பாடியுள் ளார்.

**"பரன் சென்று சேர் திருவேங்கட-**
**மாமலை ஒன்றுமே தொழ,**
**நம்வினை ஓயுமே"**

என்றார்.

முதலாழ்வார்களில் பொய்கை யார் போற்றிய திருமலையப் பனின் வேறு சிலபாடல்களை இனிக் காணலாம்.

ஐசுவர்யமான செல்வம் வேண் டுபவர்கள் இப்பெருமானைச் சேவித்துச் செல்வம் பெற்று உடனே சென்றுவிடுகிறார்கள். கைவல்ய இன்பம் வேண்டுபவர் கள் அதனைப்பெற்று அகன்று விடுகிறார்கள். இப்படிப்பட்டவர் களைப் போலில்லாமல் இத் திருவேங்கடமுடையானை ஒரு நாளும் விடுநீங்காதபடி, அவ னைச் சிந்தித்து வந்தித்து வழிபாடு செய்யும் முமுக்ஷுக் கள் (மோக்ஷம் வேண்டுவோர்)

ஐச்வர்ய கைவல்யங்களை விலக்கி நித்யமான அப்பே ரினபததைபபெற விரும்புகிறார் கள். அப்படிப்பட்டவர்களு டைய பாவங்களை (வினைசசு டரை) போக்கடித்து மோக்ஷமா கிய பேரினபததை அளிக்கும் மலை திருமலை எனகிறார ஆழ் வார். பாட்டைப்பாருஙகள.-

எழுவார் விடைகொள்வார் ஈன்துழா யானை
வழுவா வகைநினைந்து வைகல் தொழுவார
வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடமே வானோர்
மனச்சுடரைத தூண்டும் மலை.

மற்றும இததிருவேங்கடமுடை யானை நோககி 'உனது திரு மேனியில் அழகும், செலவ மும், சீலம் முதலிய குணங கஞம் நிழலிட்டுததோனறுகின றனவே' என்று ஈடுபடுகிறார பொயகையாழவார்.

திருமலையப்பனான திரு வேஙகடவன திருககைகளிலே வலமபுரிச சஙகும், திருவாழியா கிய சககரமும காடசியளிக்கின றன. இவைகளைக காணகிறார் ஆழ்வார. அதோடு "மலரமகள் நினனாகததாள" எனறபடி எம பெருமான திருமார்பில ஸ்ரீநிவா சன எனபதறகேறப, மகாலக்ஷி மியைக காணகிறார. மற் றும் மாமறையானாகிய பிரமமா வைத் திருவுந்தியிலும், (தொப் புளிலும்) சிவபெருமானைத திரு மேனியின வலபபககத்திலும கணடு வியக்கிறார. இக்காட்சிக ளால் திருவேஙகடமுடையானே முழுமுதறகடவுள்; மோக்ஷமளிப பவன் அவனே; முதலவனும அவனே எனறு உணர்ந்து உள ளமுருகிப்பாடிய பாடல பகதர் களின் நெஞசஙகளைப பரவ சமாக்குகினறன.

கைய வலமபுரியும நேமியும் கார வண்ணததது
ஐய! மலர மகள நின் ஆகததாள் செய்ய
மறையான் நின்னுந்தியான் மாமதிள மூனறெயத
இறையான் நின்னாகத் திறை.

இனி பொயகையாழ்வார மூனறு பாசுரங்களால தொடரந்து திருமலையை அனு பவிககும பாஙகினைக காண போம. எம்பெருமான் மிகவும திருவுளளம உகநது எழுந்தரு ளியிருககும இடம திருவேங் கடமாகும். அத்திருமலையில் தினநதோறும பல திசைகளிலி ருநது வைதிகரகள வநது தூப தீபஙகளாலே எமபெருமா னைப் பூஜிதது வழிபடுகிறார கள். அவரகள் நுட்பமான சாஸ திரஙகளையெலலாம்கூட கறற றிந்த விற்பன்னர்கள் எனகிறார ஆழ்வார.

வகையறு நுண்கேள்வி வாயவார்கள் நாளும்
புகைவிளககும பூம்புனலும் ஏந்தி திசை திசையின்
வேதியர்கள சென்றிறைஞ்சும வேங்கடமே வெண்சங்கம்
ஊதியவாய் மாலுகந்த ஊர்.

முதலாழவார்கள் மூவருமே இயற்கையோடு இறைவனைக் கண்டு உணர்ததுவதிலே இன பம் காணபவரகள. திருவேங் கடவனின எழிலார் திருமேனி யையும், குணஙகளையும் வரு ணிககவேணடியவர்கள, அவனு றையும, மலையையும மலை வாழ பிராணிகளையும, மலை படுபொருள்களையும கூட வரு ணிததுப் பரமானநதம அடை கிறார்கள. சானறுக ஓரிடம் காணபோம.

குறவர்களுக்குப் புனம காப் பது தொழில; பனஙகளிலே யானை முதலிய காட்டு விலங் குகள் பட்டிமேயபபுகும். அவற் றைத் துரததிப புனததைக் காவல செய்வது குறவர தொழில. தாஙகள பரண்களில இருநதபடியே தஙகள கையி லுள்ள பெரிய மாணிககக்கட் டியை யானைகளின்மீது எறி வாரகள. அபபோது அங்கு திரியும பெரிய மலைப்பாமபு கள் யானைகளின் மேறபடும் ரததின மணிகளைக கண்டு, யானைகளை மேகங்களாகவும், ரததினமணிகளை மினனலாக வும் நினைத்து (பிரமித்து) அஞ் சும். மேலும் களிறு பிளி றும். அவவொலிகளை இடியா கவும கருதிப் பயநது தங்கள் புறறுககுளளே நுழையும். இப் படிபபட்ட தன்மை வாய்ந்த திருபபதி - திருமலையைப் பற் றிய ஆழுவார பாடல்கள சஙக இலககியப்பாடலகளை நினை வூடடுவனவாக உளளன. இனி பாட்டின் வடிவம பாரபபோம.

ஊரும் வரியரவம் ஒணகுறவர் மால்யானை
பேர எறிநத பெருமணியை- காருடைய
மினனென்று புற்றடையும் வேங்கடமே - மேலசுரர்
எமமெனனு மால திடம்.

இபபாடடின கடைசி வரி யால, வானோராகிய நித்ய ஸூரிகள தேவரகள எல்லோ ரும் எங்கள எம்பெருமான திருவேங்கடமுடையான நித்ய வாசம் பணணும் திருமலை எங் கள மலையெனறு கொண டாடி விரும்பி வந்தடைவார்கள் என்று உணர்ததபபட்டுள்ளதை அறியலாம்.

(அடுத்த இதழில் முடியும்.)





# திருமலைத் தேனமுது

திரு. கோ.க.வா கோவிந்தராஜ பாவனாசார்யஸ்வாமி - ஸ்ரீரங்கம்.

புதர்களும், முட்களும் நிரம்பியுள்ள ஒரு தோட்டத்தைக் காணும் பொழுது இத்தோட டம் யாராலும பராமரிக்கப்படா மல் இருக்கிறது என்பது நன்கு புலனாகிறது. நல்ல காய்கறிச் செடிகளும், புஷ்ப வகைகளும் பயிரிடப்பட்டு மிக அழகாக காணப்படும் ஒரு தோட்டத தைக் காணும பொழுது இத் தோட்டம் மிக திறமைமிக்க ஒருவரால் மிக நன்ருகப் , பராமரிக்கப்பட்டு வருகிறது என்பது மிகத் தெளிவாகப் புலனாகிறது.

அதைப் போனறு புணய பூமியைச சூழ்ந்த கடல், மலைகள், ஆறுகள, இவைகள அழகான ரீதியில் அமைந்திருப்பதையும், கதிரவன், காறறு முதலியவைகள ஒழுங்கான ரீதியில் செயல்பட்டு வருவதையும, ஸம்ஸாரிகளின் படைப்பு, நிர்வாஹம் உள்ளிடட வினோத சூக்ஷமங்களையும் காணும் 'பொழுது இவைகள் அனைத்தையும் படைத்து காத்து ஒழுங்கான முறையில செயல்படுத்தி வருவது பகவான் என்பதும், அசெயற்கரிய செயல் அவன் ஒருவனால்தான் இயலும் என்பதும் மிகதெளிவாகப் புலனாகும்.

ஸம்ஸார அமைப்பின் தத்துவங்கள் மிகவும் சூக்ஷமமானது. ஒரு ஸமயம் பிள்ளைத் திருநறையூர் அரையர் தூக்கணுங்குருவி ஒன்று மிக அழகான முறையில் கூடு கட்டிக் கொண்டிருப்பதைக கண்டார். அவ்வமயம் பெருங்காற்ரேடு கூடிய மழை பொழிந்து சிறிது நேரத்தில் நின்றுவிட்டது. அப்பெருமழையால் தூக்கணுங்குருவிக்கூடு ஒரு சிறிதும் சேதமாக வில்லை. பிள்ளைத திருநறையூர் அரையர் அக்கூட்டைக்கண்டு மிக வியந்து, ஒரு சிறு குருவி கட்டியக் கூட்டைக், குருவியைத் தவிர பிறவொண்ணுல் அவிழ்க்கமுடியாது என்றிருக்கும் பொழுது பகவான் இவ்வளவு பெரிய ஸம்ஸாரம என்ற அமைப்பை உண்டாக்கியுள்ளானே! ஸம்ஸாரிகளை கரையேற்ற அவனாலன்ரோ இயலும் என ஆழ்ந்து சிந்திக்கலானார்.

கிணற்றுக்குள் விழுந்த சொம்பை எடுக்கப் பாதாளக் கரண்டியும் கிணற்றுக்குள் விழ வேணடிய இருககிறது. அதுபோல் ஸம்ஸாரிகளை கரையேற்றுவதற்காக பகவானும் ஸம்ஸாரியாகிறுன். பகவான் அயோத்தியில் தசரத குமாரனாக ராமனாகவும், மதுராவில் வசுதேவரின் குமாரனாக க்ருஷ்ணனாகவும் அவதரித்து பல காலங்கள் மண்ணுல

காண்டு அறஙகளை தழைககச செய்தான். அவ்வப்பொழுது பற்பல அவதாரஙகள செய்து லீலைகள் புரிகிறுன்.

பகவானின அவதாரஙகளால அககாலக கட்டத்தில உள்ளோர்கள மட்டுமே பயன்பெறமுடிகிறது. பின்னால வருவோரகள் பகவானைக் காண இயலுவதிலலை. ஆகவே பகவான் அனைவரும தமமைக் கண்டு வணஙகி மகிழததக்க நிலையில், தமது பெருமைகளை செளலப்யமாக மாற்றிக் கொண்டு திவ்ய மஙகள விக்கிரஹ (அர்ச்சை) வடிவில் ஆங்காங்கே கோயில் கொணடு அடியார்களை உஜ்ஜீவித்து வருகிறுன்.

பகவானின் திருக்கோயில்கள் பல்வேறு வரலாறுகளை அடிப்படையாகக் கொணடு தோன்றியுள்ளன. சில முக்கிய திருக்கோயில்கள் பகவானின ராம, க்ருஷ்ண அவதார காலததிறகு முனபே தோனறி இராமராலும, கிருஷ்ணராலும பூஜிக்கபபட்டு பெருமையோடு மிகத தொனமை வாயநததாக விளஙகுகிறது. சில திருக்கோயிலகள பகவானின அவதார காலததிறகுப் பிறகு தோனறி, அதில் பகவான அநதநத அவதார வடிவில் அர்சசையாக எழுநதருளி இருக்கிறுன. இவ்வகையில ஸ்ரீமுஷ்ணம், அஹோபிலம முதலான திருத்தலஙகளைக் குறிப பிடலாம்.

சில திருக்கோயில்கள் ரிஷிகளாலும், சிலவைகள அரசர்களாலும, சில ஆலயஙகள தேவரகளாலும தோனறி புகழோடு விளஙகுகினறன. பகவான தாமே தோறறுவிததுக் கொணட திருக்கோயிலகள எட்டு முககியமானவை. இவைகள் 'ஸவயம வ்யக்தம்' என்று பெருமை ஓங்க அழைக்கப்படுகிறது. இவற்றுள் கோயில் எனப்படும் ஸ்ரீரஙகம, திருமலை எனப்படும் திருவேங்கடமலை, பெருமாள கோயில எனப்படும் காஞ்சிபுரம ஆகிய மூன்று திருத்தலங்களும் ரொம்பவும் முக்கியமானவை.

இமமூன்று திருததலங்களுள் திருமலை எனப்படும் திருவேங்கடமலை மிகவும சிறப்பான இடம் பெறுகிறது. கலி முறறு முற்றப பல திருத்தலங்கள உறையும் எமபெருமானகளின சான்னிதயம குறைந்து திருததலஙகள மறையும என்று புராணங்கள கூறுகின்றன.

ஆனால் திருவரங்கம், திருமலை உள்ளிட்ட திருததலத்துறையும் எமபெருமான்கள ஸமஸாரிகள அனைவரக்கும் நலவாழவு கொடுதது, அனைவரையும் ஸமஸாரமாகிற வெஞ்சிறையிலிருநது கரையேற்றி இனி ஒருவரும இபபுவியில இல்லை எனற காலககட்டம வரையில் வஸிபபதாக ஸங்கல்பிததுக கொணடு 'கிழஙகெடுத்தாலலலது பேரேன' எனறு இருநது கொண்டிருபபான என்று ஸம்பிரதாயம கூறுகிறது. பகவானின் பரதவ நிலையை வேதஙகள காட்டுகினறன. ராம கருஷண அவதார நிலையை ஸ்ரீராமாயண பாரதாதி இதிகாசங்கள மிகத தெளிவாகக் காட்டுகினறன. இதிலிரணடிலும தெளிய இயலாத விஷயஙகளை மயறவற மதிநலம அருளபபெறற ஆழவாரகள திவய திருஷ்டி மூலம கணடு அருளிசசெயலிலே தெளிவாகக் காட்டியுளளாரகள். அருளிசசெயல (திவ்ய பிரபநதம) அரசசை எமபெருமானகளை மிக தெளிவாகக் காட்டுகிறது.

அதனிலும் ஒரு படி மேலாக பரத்வ நிலையில ஸ்ரீவைகுணடத்தில் உறையும் ஸ்ரீபரவாசுதேவனே ஸ்ரீரங்கம், திருமலை உளளிட்ட திருத்தலங்களில் உறைகிறுனென றும, இததிருத்தலங்கள் 'பூலோக வைகுணடம' என்றும ஸ்ரீபராசர படடர், ஸ்ரீஎம்பெருமானார் உளளிட்ட பூர்வாசார்யர்கள் மிகத தெளிவாக ஐயந்திரிபற அறுதியிட்டுக் கூறியுள்ளார்கள். ஸ்ரீபரவாசுதேவன் ஸ்ரீவைகுண்டததில் இருநதான் எனவும், திருமலை மீது நினறுன் எனவும், திருவரஙகத்தில் கிடநதான் எனவும் கூறுவர் பூரவாசார்யர்கள.

புண்ய பூமியில் உளள அனைத்து திவய க்ஷேத்திரங்களையும் ஒரு ஹாரமாய் வரிசைப்படுததினால திருமலையை பதக்கமாக கொள்ளலாம். திருமலை ஒரு புனித மலையாகும. திருமலையை நினைப்போர்ககு ஞாபக மறதி அறவே நீஙகி விடும. அடியார்கள மனதில நிறைந்து நினறு பெரும பதம் அளிக்கும. திருமலை 'ஸபதகிரி' எனப்படுகிறது. இப்புனிதமலை ஆதிசேஷனின வடிவாக புராணஙகள கூறுகினறன. ஆதிசேஷனின் ஏழுமலைகள் திருமலை எனவும், உடலின நடுப் பகுதி அஹோபில மலை எனவும், வால பகுதி ஸ்ரீசைலம எனவும் புராணங்கள் சிறபபித்துக்கூறுகின்றன.

திருமலையில் ஏழுமலைகளில ஒவவொரு மலைக்கும தனிதத னியே அளவறற பெருமைகள் உளளன. திருமலையின் நிரமாணத்தை நோக்குமபொழுது கலி



காலத்தில் அடியார்கள கட லாக வந்து நிறைவதறகேற்ப தெய்வீகச் சூழலில் அழகுற அமைந்திருப்பது பெரு வியப பிற்குரியது.

திருமலை மறறும் இபபுனித மலையில் கோயில் கொணடு எழுந்தருளியுளள திருவேங்க டவன் பெருமைகளைக் கூறுத புராணங்களே கிடையாது. திரு வேங்கடவன் தமது சங்கு சக்க ரங்ளை தொண்டைமான் சக்கர வரத்திக்குக் கொடுததுவிட்டார். பின்னால் ஒரு மஹான் திரும லைக்கு வந்து எம்பெருமானுக்கு சஙகு சக்கரங்களையும், திருமார பில லக்ஷ்மியையும் பிரதிஷ்டை செய்விப்பார என பவிஷ்யோத் தர புராணாதிகளில சூசகமாகக் கூறப்பட்டுள்ளது.

அவ்வணணமே பினனால ஜகதாசார்யரான ஸ்ரீஇராமானு ஜர் திருமலைக்கு வருகை புரி கிறார். திருமலையை ஆதி சேஷ வடிவாகக் கணடு மலை மீது பாதஙகளை வைத்து நடக்க அருசி முட்டிக் கால் களால் படிஏற ஆரம்பித்தார. திருவேஙகடமுடையான தாமே இறஙகி வநது ஸ்ரீஇராமானுஜ ருக்கு சேவை தந்தருளி ஸ்ரீஇரா மானுசரை படிகளில் பாதங்க ளால ஏறி வருமாறு நியமித்தார.

ஸ்ரீஇராமானுஜர திருவேங்கி டமுடையானை ஆபாத சூடம் சேவித்து லோகக்ஷேமத்திற்காக மஙகளாசாஸனம செய்கிறார். எம்பெருமான எனபதை நிரு பிதது சங்கு, சக்கரங்களை அளிக்கிறார். திருமார்பில், ஸ்ரீதேவி, பூதேவி நாச்சியார களை பிரதிஷ்டை செய்வித்து திருவேஙகடவனுக்கு மாமனார் எனற பெருமையைப் பெறுகி றார்.

ஸ்ரீஇராமானுஜர் திரு மலைக்கு ஆற்றியுளள பணிகள் அளவிடற்கரியவை. ஸ்ரீஇராமா னுஜர் ஒரு வருட காலம் திரும லையில தஙகித் திருமலை நம் பியிடம் ஸ்ரீஇராமாயண கால க்ஷேபம் கேடகிறார். ஸ்ரீமந்மண வாள மாமுனிகள் திருமலைக்கு விஜயம் செய்து சில காலங்கள் தங்கி மஙகளாசாஸனம் செயத ருளிய பெருமையை இப்புனித மலை பெறறுளளது. மாமுனி கள் நியமித்த அஷ்டதிக் கஜா சார்யரகளில திருமலை பெரிய கேள்வி அப்பன ஜீயர் ஸவாமி ஸ்தானமும ஒனறு எனபது குறிப்பிடத்தக்கது.

திருமலை பூர்வாசார்யர்கள் மிகவும ஈடுபட்ட பெருமையுடை யதாகும். ஆழ்வாரகள பனனி ருவர்களில தொண்டரடிப்பொடி யாழ்வார் தவிர ஏனைய ஆழ் வார்கள் அனைவரும் மிகவும் ஈடுபட்டு மஙகளா சாஸனங்கள் செய்துள்ளார்கள். திருப்பாணும்

வார் திருவரங்கனையே திரு வேங்கடவனாகக் காணகிறுர.

திருவேங்கடவன் விஷயமான ஆழ்வாரகளின பாசுரங்களை நோககும்பொழுது, திருலையை கைகளில் வைத்துக் கொளுசு வது போனறு பக்திப் பரவசம ளிக்கும். ஸ்வாமி தேசிகன் திரு வேஙகிடமுடையானின் தயை எனனும் ஒப்பறற குணத்தினை மிகவும் போறறி தயாசதகம என்னும் பாமாலையை சூடடி யுளளார. அததுதியில் தயா தேவியால்தான் திருவேங்கட வனுககே பெருமை என்கிறுர.

திருவேங்கடவன் ஸாளகராம ஸ்வரூபியாகச சேவை தரு கிறுன. அவனுடைய திவ்ய சௌநதரயத்தை எழுத் தில் வடிக்க இயலாததாகும.

வலது கையை தமது திருப பாதங்களைக் காட்டும் நிலை யில் வரத ஹஸ்தமாகவும், இடது கையை கத்ய வலம்பித பாணியிலும் அதாவது நான்கு விரல்களையும மூடி மேலே கட்டை விரலை அழுத்தி யுள்ள நிலையில் மிக எழிலோடு சேவை தந்தருள்கிறுன.

அரசசை எம்பெருமானகளுக்கு ஆழ்வாரகள் ஆசாரயர்கள் மங் களாசாஸனங்களாலும், வேதங் கள், அருளிச்செயல் அநுஸந் தானத்தாலும் அடியாரகளும், மஹான்களும அலை அலை யாக வந்து மங்களாசாஸனங கள் செய்வதாலும், ஆகம ரீதி யான ஆராதனங்கள், நிவேத னங்கள், உத்ஸவாதிகள் இவை கள் குறைவறச சிறப்பாக நடத் துவதாலும் விசேஷமான சான் னித்யம் உண்டாகி நிலை பெறு கின்றன.

அப்படிப்பட்ட இடங்களில ஒருவனுக்கு ஆதமிக அறிவு எளி தில் உண்டாகி ஈசுவர தரிசனம கிடைக்கிறது. புராதன காலந தொடஙகி, கணக்கற்ற ஸாதுக களும, பக்தரகளும் இத்தீர்த தஙகளுககு வநது, ஈசுவர தரி சனம வேணடுமெனறு ஆசை களை எலலாம விட்டுவிட்டு உளளன்போடு கதறியிருக்கின்ற னர. ஆதலால ஈசுவரன எங்கும இருக்கிறுன என்றுலும் இதத கைய க்ஷேததிரஙகளில விசேஷ மாகத தன்னைத தோறறுவிக கிறுன.

உதாரணமாக, பூமியில தோண்டினால் எஙகும் ஜலம் காணபபடும. ஆனால் குளம, கிணறு, ஏரி இவையுளள இடத தில் தோணடவேணடிய அவசி யமிலலை. எபபோது வேணடு மானாலும் ஜலத்தையெடுததுக் குடிககலாம எனபதாகும்.

இவ்வகையில் திருமலை யில திருவேங்கிடமுடையானை சேவிததுக்கொண்டு எணணறற சித்தர்கள், தேவர்கள், ரிஷி கள் வஸித்து வருகிறுர்கள. தினநதோறும ஆயிரககணக கான பக்தர்கள் திருவேங்க டவனைத தரிசித்துத திரும்பு கிறுரகள். ஆயிரக்கணக்கான பக்தரகள் திருவேங்கடவனை சேவிததுக்கொண்டிருக்கிறுரகள.

இப்பக்தரகள ஒவ்வொருவரை யும் கேட்டால அவரவரகள் தனித்தனியாகத் திருவேங்க டமுடையான் மூலம் பெற்ற நலன்களையும், அவன் பெரு மைகளையும் தததமது அனு பவப்படிக் கூறுவார்கள். திரு மலையில் பல புண்ய தீர்த் தங்கள் உளளன. அவைக ளின் பெருமைகள் ஞாலத தின் மாணப்பெரிது. இவைக ளுள் ஸவாமி புஷ்கரிணி மிகப் பெருமை வாய்நதது. இப் புஷ்கரிணியின் கரையில உள்ள ஆதி வராஹமூரததி மிக வும ப்ரதானமானவர். அடியார கள இவரை சேவித்த பிறகே திருவேங்கடவனை சேவிபபது தொன்று தொட்டுவரும் சிறப பாகும்.

திருவேங்கிடமுடையான் சந் னிதி ஏழுமலைகளின் தொட ரில் சேஷாசலம என்ற திரும லையின மீதுதான் அமைநதுள ளது. எம்பெருமான் சனனிதிக் கும், விமானத்திற்கும 'ஆனந்த நிலையம்' என்று பெயர. திரு வேங்கிடமுடையானுக்கு வைகா நஸ ஆகம ரீதியாக நித்ய ஆராதனைகள், மாதசமவத்ஸர உதஸவாதிகள், ஆர்ஜித உத்ஸ வங்கள், திருக்கலயான உதஸ வஙகள் யாதொரு வித குறை வின்றி மிகவும் சிறப்பாக நடை பெறுகின்றன.

தினமும் அதிகாலையில் இரணடரை மணிக்கே சுப்ரபாத சேவை ஆரம்பமாகிறது. முத லில தங்க மணிக்கதவுகள் திறக்கப்படுகின்றன. உடன பள்ளி அறையில் இருந்து போக ஸ்ரீனிவாசமூர்த்தி கர்பப கிரு ஹத்திற்குக் கொண்டு வரப்ப டுகிறுர். உடனே சுப்ரபாத சேவை ஆரம்பாகிறது.

உடனே தோமால சேவை ஆரம்பமாகிறது. கர்ப்ப கிரு ஹத்தை தூய்மைப் படுத்தி ஆராதனம் துவக்கமாகிறது. திருக்கோயிலுக்கு நான்கு கி.மீ. தூரத்திலுள்ள ஆகாச கங்கை யிலிருந்து புனித நீர் தினமும் கொண்டு வரப்பட்டு உபயோ கிக்கப்படுகிறது.

முதலில போகு ஸ்ரீநிவால மூரத்திககுத் திருமஞ்சனம செய் யப்பட்டுப பிறகுதான மூல வர் ஸ்ரீவேங்கடேசப பெருமா னுக்குப் பாதஙகளில் திருமஞ்ச னம் நடைபெறுகிறது. அப்பொ ழுது மூலவரின் பாதஙகளில் உளள கவசஙகள் களையபபடு வதால் திருவடிசேவை பகதரக ளுககு பெருவிருநதாக அமை கிறது.

பிறகு பெருமானுக்குக் கவசங் கள அணிவிககபபடடு மலர்க ளால மிக நேரததியாக அலங காரம செயவிக்கபபட்டுக கண் ணுடி, தூப, தீப உபசாரங கள செய்யபபடுகினறன. சில விசேஷ, சநதரபபஙகளில வைர கவசம், கிரீடம அணிவிககபபடு கிறது. அவவமயம் திருக்கோ யிலைச சாரநத வேத விறபன் னர்கள புருஷ சூகதம, ஸ்ரீசூக தம, அதயாபகரகள பிரபநத பாசுரஙகளையும், திருப்பாவை யும் சொலகிறாரகள.

பிறகு கொலுவு ஆரமபமா கிறது. இச்சேவை தர பார் என அழைக்கப்படுகி றது. கரபக கிருஹத்தின வெளிமணடபததில வெளளிககு டையினகீழ வெளளி நாற்கா லியில ஸ்ரீநிவாஸ மூரத தியை அமரச செய்து அன றைய திதி, வார, நக்ஷததிரஙக ளைச சொலலி வரவு, செலவு கணக்குகள படிக்கபபடுகினறன.

பிறகு ஸ்ரீவேஙகடேச சஹஸ ரநாமாரசசனை நடைபெறுகி றது. மககளின நலனுககா கவும், லோக க்ஷேமமாகவும் சங்கலபிதது நடததப்படுகிறது. அரசசனை முடிநதபிறகு பிரசா தஙகள அமுது (நிவேதனம) செய்விக்கப்படுகிறது. அடுதது சாற்று மறை கோஷடி நடை பெற்று மஹா ஆரத்தி நடை பெற்று கோஷ்டிக்குத் திருவாரா தன தீர்த்த பிரசாத விநியோகம் நடைபெறுகிறது.

அடுத்து பொதுஜன சேவை யாக தர்மசேவை விடபபடு கிறது. ஆயிரக்கணக்கான பகதகோடிகள் பகவந்திருநாம கோஷத்தோடு சேவிக்கும் காட்சி மனதுக்கு பரமவசமளித்து பக் திக கண்ணீர் பெருககும்.

பிரதி வெள்ளிக்கிழமை தோறும் மூலவருககுத திருமஞ சனம் நடைபெறும். செவ் வாய்க்கிழமை தோறும காலை 9 மணி அளவில் அஷ்டதள பாத ஆராதனம என்ற சேவை பதினைந்து நிமிடம் நடை பெறும். 108 தங்கத்தி னால் ஆன தாமரை மலரக ளைக் கொணடு பெருமாள் திருவடிகளில் அர்ச்சிககபபடுகி றது. ஒரு இஸலாமிய அன்பர சுமார் ஐந்து லக்ஷம் ரூபாய செலவில் இந்த 108 தஙகத தாமரை மலர்களை திருவேங்க டமுடையானுக்குக் காணிககை யாகக கொடுத்துளளார என் பது குறிபபிடத்தக்கது. தின மும இரவு ஏகாநத சேவை நடைபெறறு பன்னிரணடு மணி யுடன் நிறைவுபெற்று தங்கக் கதவுகள் சாற்றப்படுகின்றன.

ஆகாயத்தில் உள்ள நக்ஷத் திரங்களைக்கூட எணணிவிட லாம். மழைத்தூற்றல்களைக் கூட எண்ணிவிடலாம். ஆனால் திருவேங்கடவனின் பெருமைக ளையும், திருமலையின் சிறப்புக் களையும் எழுத்தாலோ, வார்த் தைகளாலோ அளவிட்டுக் கூற இயலாததாகும்.

திருவேஙகடவனுக்கு நடைபெ றும் உத்ஸவங்களில் நவராத்திரி நன்னாளின போது நடை பெறும் பிரம்மோத்ஸவம் மிக வும் சிறப்புமிக்கது. இருவேளை களிலும் திருமலை அப்பன் வாகனங்களில் திருவீதி உலா வரும காட்சிகளைக் காண கண் கோடி போதாது. காணுந்தோ றும் கண்கள கோடானுகோடி வேண்டும்.

நமது 'ஸபதகிரி' பக்த நேயர் கள அனைவரும் திருமலை பிரமமோதஸவத்திறகு அலை கடலெனத் திரண்டு வந்து திருமலைத் தேனமுதுண்டு அனைத்து வளங்களும் பெறறு மீண்டும பிறவியிலாப் பெரு வாழவு பெறுவாரகளாகுக!

## நன்றி

எங்கள வேண்டுகோளுக்கிணஙகி 'பிரமமோதஸவ சிறப்பு' இதழுக்கென 'ஸப்தகிரி'க்கு பலர தஙகள் சமய கட்டுரைகளை அனுபபியுளளனர். வேஙகடவன் புகழ பேசும அவர்கள்தம் படைபபுககள் வைணவ நெறியின சிறபபினையும், இலக்கிய மேப்பாடடுபபெருமையினையும, விளககுவதாக அமைந்துள்ளன. காலம கடநது ஒரு சில கட்டுரைகள் தாமதமாக எங்களுக்குக கிடைததமையால, எல்லாக் கடடுரைகளையும் இவ் இதழில் வெளியிட முடியவிலலை. விடுபடட கட்டுரைகள் அடுதத இதழில் பிரசுரிக்கப்படும். கடடுரைகள் அனுப்பிய அறிஞர் பெருமக்களுக்கு எஙகள நன்றியை மேலாணமையின் சார்பில் தெரிவிததுககொளகிறோம்.

--ஆசிரியர்.



# வேதத்தில் விளங்கும் வேங்கடவன்

திரு. ஆர். கண்ணன் ஸ்வாமி - சென்னை.

அநாதியான நமது வைதிக மததில பரபல பரமாணமாக விளஙகுவது வேதமேயாகும. "வேதைஸச ஸரவை. அஹமேவ வேதய." எனற கீதை வாக குபபடி அனைதது வேதங களாலும விளககபபடும பரம பொருள ஸ்ரீமநநாராயணனே ஆவார். அவரது ஸவரூபஙகள ஐந்து எனறு வேதங்கள விளம புகினறன. "அமபஸய பாரே புவநஸய மதயே நாகஸய ப்ருஷ்டே மஹதோ மஹீயான, சுக்ரேண ஜயோதீகுமஷி ஸம நுப்ரவிஷட பரஜாபதிஸ சரதி கரபே அநத" என்று தைததீரிய உபநிஷத இரணடாம பரசனத துவககததில பகவத் ஸ்வரூபம, "பர வயூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சா" எனறு ஐநதுவிதமா கக் கூறபபட்டுளளது.

ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி ஸமேதராய அநநதன கருடன விஷவக்ஸேநர முதலிய நிதய ஸூரிகள புடைசூழ ஸ்ரீவைகுணடலோகத்தில வீற றிருக்கும பரமனது நிலையை 'பரதவம' எனபர. திருபபாற கடலில பாம்பணை மெததை யில் பள்ளிகொணடிருககும் பர மனது நிலை "வ்யூஹம" எனபபடும கணணாலே காண முடியாதவரான பகவான எல லார் கணணுக்கும தோறறக் கூடிய வகையில மானிடனாக்

ஸ்ரீராமனாகவும், ஸ்ரீகிருஷ்ண னாகவும் வந்து அவதரித்த நிலை "விபவம்" எனப்படும். பாலில் வெண்ணெய் போன்று உலகெங்கும் நீக்கமற நிலைத் திருக்கும் நிலை "அந்தர்யாமித் வம்" எனப்படும். பூலோ கத்தில் ஸ்ரீரங்கம், திருப்பதி மலை முதலிய க்ஷேத்திரங்க ளில் சிலை வடிவில் வீற் றிருக்கும் நிலை "அர்ச்சாவதா ரம்" எனப்படும். வேதம் தமிழ் செய்த வித்தகரான நம்மாழ்வா ரும், "விண்மீதிருப்பாய் மலை மேல் நிற்பாய் கடல் சேரப் பாய் மண்மீதுழல்வாய் இவற் றுள் எங்கும் மறைந்துறைவாய்" என்று இவ்வைந்து நிலையைத் தம் திருவாய்மொழியில் போற் றியுள்ளார். மனிதர்கள் அனை வரும் கண்டு பற்றுவதற்கேற்ற வகையில் அர்ச்சாவதாரம் எனப் படுகின்ற திவ்யதேசங்கள்தாம் நமக்குச் சாலச்சிறந்தவையா கும். ஆழ்வார்கள் அனைவரும் அர்ச்சாவதாரத்திலதான் மண் டிக்கிடந்துள்ளார்கள்.

பகவான் அர்ச்சாமூர்த்தியாய் எழுந்தருளியிருக்கும் திவ்யதே சங்கள் 108 என்று கூறப் படுகின்றன. அவற்றுள்ளும் ஸ்வயம் வ்யக்த க்ஷேத்ரங்கள் என வழங்கப்படுபவை எட்டு ஆகும். ("ஆத்யம் ரங்க மிதி ப்ரோக்தம் விமானம் ரங்க ஸம்ஜ்ஞகம், ஸ்ரீமுஷ்ணம் வேங் கடாத்ரிஸ்ச ஸாளக்ராமம ச நைமிசம்; அஷ்டௌமே மூர்த்ய ஸந்தி ஸ்வயம் வ்யக்தா மஹீ தலே") ஸ்ரீரங்கம், ஸ்ரீமுஷ்ணம், திருவேங்கடமலை, ஸாளக்ராமம், நைமிசாரண்யம், நான்குனேரி என்கிற வானமாமலை, புஷ்கரம், பதரிகாச்ரமம் ஆகிய எட்டும் எவராலும் ஸ்தாபிக்கப்படாமல் தானே தோன்றிய க்ஷேத்திரங் களாகும். இவ்வெட்டினுள்ளும் திருவேங்கடமலைக்கு ஈடானது எதுவுமே கிடையாது. "வேங்க டாத்ரி ஸமம் ஸ்தானம் ப்ரஹ் மாண்டே நாஸ்தி கிஞ்சந: வேங் கடேச ஸமோ தேவோ ந பூதோ ந பவிஷ்யதி" என்று புரா ணங்கள் எல்லாம் ஒருமுகமாகக் கூறுகின்றன. இத்தகைய வேங் கடவனின் சிறப்பை யஜுர் வேதத்தின் மூலமாகவும், ரிக வேதத்தின் மூலமாகவும் இனிக் காணபோமாக.

கருணாமூர்த்தியான ஸ்ரீமந்நா ராயணன மண்ணுலகில் வாழும் மனிதர்கள் எல்லாரும் செல்வம் முதலிய இம்மைப் பயன்களை யும் மறுமைப் பயன்களையும் பெற்று இன்புற்று வாழ வேண் டுமெனத் திருவுள்ளம் கொண் டார். அதற்காக யாக ஸ்வ ரூபியான பகவான் விஷ் ணுவின் உருவில் யாகத்திற் குரிய எட்டு வகைப்பொருள்க ளையும் தேவர்கள் கண்ணுக் குத் தெரியாமல் மறைத்துக் கொண்டு பூலோகத்துக்கு வந் தார். அதுகண்ட தேவர் கள், பூலோகத்தவர்கள் செல் வந்தர்களாக ஆகிவிட்டார்களா னால் நம்மையை எதிர் பார்க்கமாட்டார்கள்; நம்மை மதிக்கவும் மாட்டார்கள் எனப் பொறாமை உள்ளம் கொண்ட னர். யாகப்பொருள்களை எடுத் துக் கொண்டு பூலோகம் செல் லும் விஷ்ணுவைப் போக வொட்டாமல் தேவர்கள் எல்லா ரும் கையை விரித்துக்கொண்டு குறுக்கே நின்று தடுத்தார் கள். அப்பெருமானை இந்தி ரன், மேலும் மேலும் தூரத் திக்கொண்டு சென்று மேலே போகவொட்டாமல் தடுத்து வந் தான். உடனே விஷ்ணுவான வர் இந்திரனைப் பார்த்து, "யார் நீ? என்னைப் போக வொட்டாமல் மேல் விழுந்து தடுக்கிறாய்" என்று கேட்டார். அதற்கு இந்திரன் "எப்படிப் பட்ட செல்ல முடியாத பகு திக்குச் சென்றாலும் நான் என் விரோதியை விடாமல் துரத் திச் சென்று கொல்லக்கூடி யவன்" என்றான். அதுகேட்ட விஷ்ணு, "நான் எப்படிப்பட்ட கடினமான பிரதேசங்களுக்கும் சென்று பகைவர்களிடம் சிக் காமல் எனது பொருள்களைப் பாதுக்காத்துக் கொண்டு வரு வேன்" என்றார். உடன் இந் திரன், நீ எப்படிப்பட்ட கடி னமான பாதையில் சென் றாலும் உன்னைக் கொன்றே தீருவேன்" என்றான். பின் விஷ்ணு வராஹரூபம் எடுத் துக்கொண்டு விட்டார். "தீக்ஷ ணீயங்கள்" எனப்படும் நான்கு வகையானப் பொருள்களையும், "உபஸதம்" எனப்படும் மூவகைப் பொருள்களையும், ஆக ஏழை யும் ஏழுமலைகளாக ஆக்கிவிட் டார். தூண்டா விளக்கு (தொங் கும் குட விளக்கு) போன்ற சமஸா பாத்திரத்தின் வடி வில் ஐச்வர்யங்களையெல்லாம் கையில் வைத்து மறைத்துக் கொண்டு விட்டார். அத்தகைய பெருமானே ஏழுமலையானாக ஸ்ரீநிவாச பகவானாக வேண்டு வார்க்கு வேண்டியவற்றையெல் லாம் கொடுத்துக்கொண்டு கண் கண்ட தெய்வமாகத் திருமலை யில் இன்றும் விளங்கிவருகிறார்.

## யஜுர் வேதம் 6-2-4

யஜ்ஞோ தேவேப்யோ நிலா யத விஷ்ணூ ரூபம் க்ருத்வா ஸ ப்ருதிவீம ப்ராவிசத் தம தேவாஹஸ்தாந்த்ஸகும்ரப் யைச்சன் தமிந்தர உபர் யுபர் யத் யக்ராமத் ஸோ(அ)ப்ரவீத்

கோமா(அ)யம் உபர்யுபர் யத்யக் ராமீ தித்யஹம் துர்கே ஹந்தே த்யத கஸ்தவமிதயஹம் துர காதாஹர்தேதி ஸோ(அ)ப்ரவீத துர்கேவை ஹந்தாவோசதா வராஹோ(அ)யம் வாமமோஷஸ ஸபதாநாம் கிரீணும் பரஸ்தாத் விததம வேத்யம அஸுராணும பிபர்தி" (அஸுர - அஸுஷு ராதி - த்ருப்யதி - ப்ராணனை போஷிப்பவர் - சரீரததை வளர்ப் பதில் நாட்டம் கொண்டவர எனற பொருளில் மனிதரைக் குறிக்கும.)

அடுத்தபடியாக, ஸ்ரீநிவாஸ பகவான் தன்னை அண்டி வநத பகதரகளுக்கு வேண் டிய செல்வஙகளை வாரி வாரி வழஙகுகிறுர் என யஜுர வேதம் கூறுகிறது. "ஹே விஷ்ணுவே! நீர் வானுல கிலிருந்தும, பூலோகத்திலி ருந்தும், மஹரலோகத்திலிருந தும, அந்தரிக்ஷலோகததிலிருந தும், கொணர்நத பெரும் செல் வங்களால் உமது கைகளை நிரப்பிககொளவீராக, அவறறை மேனமேலும் பெருககி, மிகுநத முத்துக்களையும் மணிகளையும் வைரங்களையும் வலககையா லும் இடக்கையாலும் வாரி வாரி வழஙகுவீராக."

## யஜுர் வேதம் 1-2-13

"திவோவா விஷ்ண வுதவா ப்ருதிவ்யா மஹோவா விஷண வுதவாந்தரிக்ஷாத ஹஸதௌ புருணஸ்வ பஹுபிர் வஸவ்யை ராபரயசச தக்ஷிணுதோத ஸவ் யாத்"

ஸ்ரீவேங்கடேச பகவானிடத் தில யார் யார் எனனென்ன பிரார்த்தனை செயதுகொணடா லும் அப்பிராரத்தனைகள எல லாவறறையும் நிறைவேறறித தருகிறுர எனகிறது ரிகவேதம்.

"ஹே மநுஷ்யா! நீ பணம் காசு அற்றவனாய புதிதாக ஐச் வர்யத்தைப பெற விருமபினா லும், இழநத ஐச்வரயததை மீணடும பெற விரும்பினா லும, ஊனக்கணணே ஞானக் கண்ணே இல்லாதவனாக இருநதாலும், பலவிதமான துன்பங்கள் மிக்கவனாய ஆத் யாதமிக ஆதிபௌதிக ஆதி தெய்விகங்களாகிய தாபதரயங கள மிகக வனாய இருநதாலும, தர்மாரததகாம மோக்ஷஙகளா கிய புருஷாரததங்களை அடைய முடியாதவாறு இடையூறு கள மிககவனாய இருநதாலும, ஸ்ரீநிவாச பக்தர்களை முன் னிடடுக கொண்டு ஸ்ரீநிவா சனுடைய மலைக்குச செல்வா யாக. அநத ஸ்ரீநிவாச பகதர களை முனனிட்டுககொண்டு அப்பெருமானிடம் நீ, துனபங கள அனைததும நீஙகி இன பஙகள் ஏறபட பிராரததனை செய்துகொளவாயாக. அப்பெரு மானிடம உனனை ஸமர்ப்பித துக்கொள்வாயாக."

"அராயி காணே விகடே கிரிம கசச ஸதாந்வே; சிரிமபிடஸய ஸதவபிஸ்தே பிஷட்வா சாத யாமஸி"

(ரிகவேதம் அஷடகம் - 8 அதயாயம்-8, வர்க்கம்-13, ரிக-1)

"அராயிகாணே விகடே கிரிம்
கச்சேதி தம்விது:
ஏவம் வேதமய: ஸாக்ஷாத
கிரீந்த்ர: பன்னகாசல:"
(பவிஷ்ய புராணம் 4-21)

ஆக யஜுருஸவரூபியான மகா விஷ்ணு, மணணுலகில உளள மககள எல்லாரையும செல வம மிககவரகளாய இனப மயமான வாழ்வடையச் செய வதறகாகவே திருப்பதிமலையில ஸ்ரீநிவாச பகவானாக விளங்கி வருகிறுர என்றும்; அபபெரு மான எல்லா உலகஙகளிலு முளள செலவஙகளையெலலாம கொணடுவநது கையில் நிரப் பிககொணடு, அவற்றை ஒனறு பததாகப பெருக்கி, இடது கையாலும் வலது கையா லும மக்களுக்குப் பொனனை யும் முததையும மணியையும் வாரி வாரி வழஙகுகிறுர என் றும் யஜுர வேதததில கூறப் பட்டுளளது. மேலும் திரு மலை எமபெருமானிடம் பக்தர் களை முன்னிட்டுக் கொணடு யார் யார எனனென்ன பிராரத் தனை செயதுகொணடாலும் அவறறையெலலாம அபபெரு மான நிறைவேற்றிததருகிறுர் எனகிறது ரிகவேதம. இககருத தையே பொயகையாழ்வாரும,

"எழுவார் விடைகொள்வார்
ஈன்துழா யானை
வழுவா வகைநினைந்து வைகல்-
தொழுவார்
வினைச்சுடரை நந்துவிக்கும்
வேங்கடமே வானோர
மனச்சுடரைத தூண்டும் மலை"

என்னும பாடலில் வலியுறுத தியுளளார. இவ்வாறு வேதத தினால விளககப்படும் வேங கடவனை உலகிலுளள மக்க ளனைவரும வணங்கி எலலா நலனகளும பெறறு இனபுற்று வாழ்வார்களாக.



# செய்திச் சுருக்கம்

## புதிய அறங்காவலர்க்குழு

புதியதாக அமைககப்பட்டுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானததின் அறங்காவலர்க்குழு உறுப்பினர்கள் மறறும தலைவரின் பதவியேறபு மற்றும் உறுதிமொழி நிகழ்ச்சிகள் 10–8–95 அன்று திருமலைக்கோயிலில் மூலவர் சன்னிதியில், ஆந்திர மாநில முதல்வர திரு. என்.டி. ராமாராவ் அவரகளின் முனனிலையில் நடைபெறறன. இது சம்பந்தமாக ஏறபாடு செய்யபபட்ட சிறு விழா நிகழ்ச்சிக்கு தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. என். ரமேஷ்குமார் தலைமை வகித்தார். உறுதிமொழி ஏறற குழு உறுப்பினர்களின் விவரங்கள் பின்வருமாறு: திரு. பி. வேங்கடேஸ்வரலு (அறஙகாவலர்க குழுத்தலைவர்) உறுப்பினர்கள பினவருமாறு: திரு. ரஜனிகாந்த், திரு. ராஜ்குமார் மற்றும் திருமதி. பானுமதி ராமகிருஷ்ண (பிரபல திரைப்படக கலைஞரகள்) திருவாளர்கள். ஏ. மோகன்ரெட்டி சத்யரா்ராயண, ராஜய்யா (சடடமன்ற உறுப்பினர்கள) தேவநாதம, கோடேஸ்வரராவ், கே. ராமச்சந்திரா ரெட்டி, வெங்கடபதிராஜு (ஆந்திரமாநில அறநிலையத் துறை ஆணையர) மறறும என். ரமேஷ்குமார் (செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம்). இந்நிகழ்சசியினபோது ஆந்திரமாநில நிதி மற்றும் வருவாய்த்துறை அமைசசர திரு. என். சந்திரபாபு நாயுடு, அறநிலையத்துறை அமைசசர திரு. சிமமாத்ரி சத்யநாராயண, சுற்றுலாத்துறை அமைச்சர் திரு. எம். நரசிம்மலு, நலவாழ்வு அமைச்சர் திரு. இ. மாதவ ரெட்டி ஆகியோர் உடன் இருந்தனர். காலையில பதவிஏற்பு நிகழசசிக்குப் பிறகு அறங்காவலரக்குழு உறுப்பினர்களைப் பொதுமக்களுககு அறிமுகப்படுததும்முகத்தான் பொதுக்கூட்டம் ஒன்று அன்று மாலை திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழக விளையாட்டுத்திடலில திரு. என.டி. ராமாராவ் சிறப்பு விருந்தினராக பங்கேறக மிகச் சிறப்பாக நடைபெற்றது. திருமதி. ஷோபாராஜு அவர்களின் இசைநிகழ்ச்சியுடன இவ்விழா இனிது துவஙகியது. விழாவிறகு ஆந்திரமாநில அறநிலையத்துறை அமைச்சர் தலைமை வகிகக, அறங்காவலரக்குழுவினர பொதுமக்களுக்கு அறிமுகபபடுத்தப்பட்ட பின்னர், அவர்களை திரு. என.டி. ராமாராவ் அவர்கள் பொனனாடைப் போரததிக் கௌரவித்தார். அறஙகாவலரக்குழுத தலைவர் திரு. பி. வேங்கடேஸ்வரலு அவர்கள் பேசுகையில் திருமலையை ஒரு முக்கிய மற்றும் முதல் யாததிரைத் தலமாக மாற்றவேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தினார். பின்னர் திரு. ரஜனிகாந்த் அவர்கள் தெலுங்கிலும், தமிழிலும் உரையாற்றியபோது ஆன்மீகச் சேவை ஆற்றிட தனக்கு வாய்ப்பளித்த முதல்வர் அவர்களைப் பாராட்டி, உறுப்பினர் என்ற வகையில் தனக்களிககப்பட்ட வாய்ப்பினை நல்லமுறையில் பயன்படும் வகையில் தான் செயல்படப் போவதாக உறுதி அளித்தார். மற்றும்பல உறுப்பினர்கள் பேசி முடித்த பின்னர், இறுதியில் தி.தி. தேவஸ்தான செயலாட்சித்தலைவர் திரு. என். ரமேஷ்குமார் அவர்கள் நன்றி நவின்றார்.

* * *

## திருமலையில்

ஆந்திர மாநில முதல்வர் திரு. என்.டி. ராமாராவ் அவர்கள் தம் துணைவியாருடன் இரண்டுநாள் பயணமாகத் திருமலைக்கு வருகை புரிநதார். 11--8--95 அனறு சுப்ரபாத சேவையில் பங்கேற்ற முதல்வர் அவரகள் திருலையில். காடுமேம்பாட்டுததிட்டததின்கீழ் 'ராமா' மற்றும் 'லக்ஷ்மண' எனும் பெயர்க



ளிட்டு இரண்டு செடிகவகைளை நட்டார். பின்னர் தி.தி. தேவஸ்தான மலர்த்தோட்டங்க ளைப பற்றிய 'கையேடு' ஒன றினை வெளியிட்டார். பின னர 'ஸப்தகிரி' தர்ம சததிர வளாகத்திலுள்ள 'நரமதா' கட் டிடத்தினைத் திறந்துவைத்தார். ரூ. 1.25 கோடி செலவில் கட்டப்பட்ட இக்கட்டிடத்தில் ஒரே சமயத்தில் 390 யாததிரி கர்கள் இலவசமாக தஙகலாம். தனது பிரயாணத்தின் இறு திக்கட்டமாக முதலவர் அவர கள திருப்பதியில் தி.தி. தேவஸ தானத்தாரின திருவேஙகடவன் இளநிலை கல்லூரிக்கட்டிடதுதி னைத் திறந்துவைத்தார்.

* * *

இந்தியத் தலைமைத் தேர் தல் ஆணையர் திரு. டி.என். சேஷன அவர்கள் 12-8-95 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார். திருமலையில் அர்ச்சனை மறறும பல்வேறு கோயில் நிகழ்ச்சிகளில் பங்கேற ஹர். திருமலையில் திரு. டி.என். சேஷன் அவர்கள தி.தி. தேவஸ் தான இணைச்செயலாட்சித்லை வர், (திருமலை), சிறப்புநிலை உதவி செயலாட்சித் தலைவர், கோயில் பெயிஷ்கார் ஆகியோர களால் எதிரகொள்ளப்பட்டார்.

* * *

## குழுத் தீர்மானங்கள்

புதியதாக அமைக்கப்பட்ட தி.தி. தேவஸ்தான அறங்கா வலர்க்குழுவின் முதற கூட்டம் 10-8-95 அன்று திருமலையில் கூடியது. இதுபோது தீரமா னிக்கபபட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு: திருப் பதியில் குடிநீர்த்திட்டத்திறகா கும் செலவினை முழுமை யாக தேவஸ்தானம் ஏற்பதாக வும் அதற்குப் பதிலாக திருப்ப தியிலுள்ள தேவஸ்தான கட் டிடஙகளுக்காகத திருப்பதி நக ராடசிக்குச செலுத்திடும் வரிக ளிலிருந்து தேவஸ்தானத்திற்கு விலக்கு அளித்திட மாநில அர சினை அணுகவும முடிவுசெய் யப்பட்டுள்ளது.

தேவஸதான நிர்வாகம் மற் றும் நிதி சம்பந்தமாக அமைக்கப்படும் துணைக்குழு உறுப்பினர்களாக திருவாளர் கள் ராஜய்யா, ஏ. மோகன், கோடேஸ்வரராவ் ஆகியோ டும், செயற்குழு உறுப்பினர்க ளாக திருவாளர்கள் தேவநாதன், ரெட்டி சதயநராயணு, ரஜினி காநத் ஆகியோரும் நியமிக்கப் பட்டுளளனர.

'முழுங்கால்மெடடு' எனும் இடத்தில் ஸ்ரீராமானுஜரின் 'நினைவு வளைவு' ஒன்றினைக் கட்ட ரூ. 1 இலட்ச மும், ஆழ்வாரகள், ஹரிதாஸர் கள் ஆகியோரின உருவசசிலை கள் அமைகக ரூ.20 இலட்சமும், மூனறு 'மலைக்காடசி முனை கள்' அமைக்க ரூ. 12 இலட் சமும், போன்றன அடஙகும வகையில் திருமலை அடிவார மான அலிபிரியிலிருநது திரும லைவரை செல்லும் மலைவழிச சாலையில் அமைக்கப்படும் பல் வேறு கட்டிடப்பணிகளுக்காக ரூ. 47 இலட்சம் ஒதுக்கப்ப டும்.

* * *

தி. தி. தேவஸ்தானத்தா ரின் கலவி அமைப்பின கீழ், 'புராணச்சொற்பொழிவு' பயிற் சிக் கூடத்தில் ஓராணடு, இரண் டாண்டு கால பயிற்சி மேற் கொளளும் மாணவ, மாணவி களுக்குத் தரப்படும் ஊக்கத் தொகை ரூ. 600லிருநது ரூ. 750/- ஆக உயர்த்தபபடும்.

* * *

## நன்கொடை

தி.தி. தேவஸ்தானம் மேற் கொண்டுளள நித்ய அன்னதா னத் திட்டத்திறகென, திரு. டி. என். ராமயயா மற்றும் திரு மதி. டி. லக்ஷ்மம்மா ஆகியோர் பெயரில், 17-8-95 அன்று கர நாடக மாநிலம் சிக்மகளூரைச் சார்ந்த காபபித்தோட்ட உரிமை யாளரான திரு. ராமயயா அவர கள ரூ. 5,55,555/- நனகொடை யாக அளித்துள்ளார்.

* * *

## ஸ்ரீதியாகராஜர் இசைவிழா

அணமையில திருப்பதி தியாக ராஜ அறக்குழு மணடப வளாகத்தில. ஸ்ரீதியாகராஜரின் 53ஆவது வருடாந்திர இசை விழா மிகச சிறப்பாக நடை பெற்றது. 12 நாட்கள் நடை பெற்ற இவ்விழாவினை இந்திய உசசநீதிமன்றததின் முன்னாள் நீதிபதி திரு. பி.ஆர். கிருஷ்ண ஐயர் அவர்கள துவக்கிவைத் தார். திருவாளரகள் செம்மங் குடி ஆர். ஸ்ரீநிவாச ஐயர், வை. ராமசசநதிரன், கே. முர ளிதரன், மாஸ்டர் ராம்பிரஸாத், ஓ.எஸ். தியாகராஜன், என். ரமணி, கே.வி. நாராயண சாமி, டி.என். சேஷகோபா லன், டி.என. கிருஷ்ணன் மற றும் ஹைதராபாத் சகோதரி கள், திருமதி. கீதா கிருஷ்ண மூர்த்தி, திருமதி. ஜெயா கிருஷ் ணன் போனறோர் பங்கேற்ற இசைக் கசசேரி நிகழ்ச்சிகள் செவிக்கும், சிநதனைக்கும் பெரு விருநதாக அமைந்தன. இவ்வ ருடம் மேற்படி ஸ்ரீதியாகராஜர் அறக்குழுவின் சார்பில் பதம பூஷண் திருமதி. டாக்டர் கங் குபாய் ஹேஙகல் அவர்களுக்கு 'ஸப்தகிரி சங்கீத வித்வன் மணி' எனும் பட்டம் அளிக்கப் பட்டு கௌரவிக்கப்பட்டார் என் பது குறிப்பிடத்தகுந்த ஒன்று கும்.

卐卐卐卐卐

Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor and

